# ஸ்ரீ முத்தையா பாகவதர்

## சரிதம்

எழுதியவர் :

வித்துவான் H. வைத்தியநாதன்

மதராஸ் பிரிமியர் கம்பெனி பிரசுரம்

முழு விற்பனை யுரிமையாளர் :



தமிழ் நாடு வெளியீடு

33, பிராட்வே, சென்னை

# முகவுரை

இப்போதுள்ள ஸங்கீத வித்துவான்களுள்ளும் ரஸிகர்களுள்ளும் முத்தையா பாகவதரை அறியாதவர் இரார். பல அம்சங்களில் அவர் சிறந்தவர்; கர்நாடக சங்கீதத்தை ஸம்பிரதாயப்படி கற்றவர்; கச்சேரி செய்பவர்களில் முதன்மையான ஸ்தானம் வகித்தவர்; ராகம், தானம், பல்லவி பாடுவதில் மிகவும் பெயர் பெற்றவர். பட்டணம் சுப்பிரமணிய ஐயர் பாட்டைக் கேட்டவர்கள் முத்தையா பாகவதரை அவருக்குச் சமானமாகச் சொல்வார்கள். பிற்காலத்தில் தேக அசௌகரியத்தால் அவர் ஹரிகதா காலக்ஷேபம் செய்யத் தொடங்கினார்.

ப்ரவசனத்திலும் வாக்சாதுர்யத்திலும் கதையை ரஸமாகச் சொல்வதிலும் அவர் நிகரற்றவராயிருந்தார். தமிழில் விசேஷ பயிற்சியுள்ளவர். தியாகராஜ சுவாமிகளின் சரித்திரத்தை உணர்ச்சி பெருகச் சொல்வதில் மிக்கப் புகழ் படைத்தவர். ஸங்கீத சாஸ்திரத்தை நன்றாகக் கற்றவர்.

சங்கீதத்தில், ஸ்வரஞானம், பாடும் சாமர்த்தியம் என்பன ஒருவகை. சங்கீத சாஸ்திரஞானம் என்பது அவற்றினும் தனிப்பட்ட பெருமையையுடையது. எனக்குத் தெரிந்த அளவிலே பாடுவதிலும் சங்கீத சாஸ்திரத்திலும் ஆழ்ந்த அறிவு பெற்று விளங்கியவர் முத்தையா பாகவதர் ஒருவரே. சென்னை மியூஸிக் அகாடமியில் ராக சர்ச்சை நடக்குங் காலங்களில் முத்தையா பாகவதர் சிங்கம் போல் விளங்கினார். அப்போது விஷயத்தைச் சொல்லுவார்; பின் அதற்கு வேண்டிய ஆதாரங்களைக் கூறுவார். பிறகு அதன்படி பாடிக் காட்டுவார். அம்மாதிரியான சந்தர்ப்பங்களில் முத்தையா பாகவதருடைய அபிப்பிராயங்களைக் கேட்க, பல வித்துவான்களும் ரஸிகர்களும் ஆவலோடு கூடுவார்கள்.

இவைகளைக் காட்டிலும் முத்தையா பாகவதருடைய கீர்த்தனைகளை நம் நாட்டில் அவருக்கு என்றும் சாச்வதமான கீர்த்

தியை நிலைநாட்டியுள்ளன. அவர் அநேக அபூர்வ ராகங்களில் கீர்த்தனைகள் இயற்றியிருக்கிறார். புதிய ராகங்களையும் கற்பனை செய்திருக்கிறார். சங்கீத மும்மூர்த்திகளுக்குப் பிறகு அளவற்ற, உயர்தரமான கீர்த்தனைகளை செய்தவர் முத்தையா பாகவதரைத் தவிர வேறொருவரும் இல்லை. பட்டணம சுப்பிரமணிய ஐயரும் பூச்சி ஸ்ரீநிவாஸ ஐயங்காரும் உயர்தரமான கீர்த்தனைகள் இயற்றியிருக்கிறார்கள். ஆனால் முத்தையா பாகவதர் செய்த அளவு இயற்றவில்லை. முத்தையா பாகவதர், வர்ணங்கள், ராகமாலிகை, கீர்த்தனைகள் ஆகிய எல்லாம் சேர்த்து ஐந்நூறு உருப்படிகள் செய்திருக்கிறார். ஆதலின் கர்நாட சங்கீதம் இருக்கும்வரை முத்தையா பாகவதருக்குச் சிறந்த ஸ்தானம் உண்டு.

அவருடைய ஜீவிய சரித்திரத்தை வித்வான் ஸ்ரீ H. வைத்தியநாதன் சுருக்கமாக எழுதியிருக்கிறார். இதில் கூறப்பட்டுள்ள விஷயங்கள் எனக்குத் தெரிந்தவரையில் எவ்வித மிகையும் இல்லாதபடி உண்மையாகவே எழுதப்பட்டுள்ளன. அவை ஆதி முதல் முறையாகவும் அழகாகவும் அமைந்துள்ளன. எல்லோரும் அவற்றை அறிந்து இன்புறுவர் என்று நம்புகிறேன்.

இப்படிக்கு,

**T. L. வேங்கடராம ஐயர்.**

# பொருளடக்கம்

# 1. முன்னுரை

'முத்தமிழ் என்று போற்றப்படும் இயல், இசை, நாடகம் என்பனவற்றுள் இசை தனிச் சிறப்புடன் விளங்குவதனால் அதனைப் பொன்னிற் பதித்த மணிபோல் நடுவிலே வைத்தனர் பண்டைத் தமிழர்' என ஆன்றோர் கூறுவர். சங்க காலந் தொட்டு அதாவது சுமார் இரண்டாயிரம் வருடங்களுக்கு முன்னுலிருந்தே இந்த முத்தமிழும் போற்றி ஆதரிக்கப்பட்டு வளர்பிறைச் சந்திரன் போல் வளர்ந்து மேன்மை பெற்றுள்ளன. அவற்றுள் இயலும் நாடகமும் பிற்காலத்தில் கொஞ்சம் மங்கும் நிலையை அடைந்தன. இசைத் தமிழோ என்றும் மங்காத நிலையிலேயே ஒளிவிட்டு அணையா விளக்காய் இன்றும் அழகுபெற்று விளங்குகிறது. மக்கள் அதன் சாஸ்திர வளர்ச்சியிலே விசேஷ ஆதரவு காட்டவில்லையெனினும், அனுபவிப்பதிலே முன்னிலும் பதின்மடங்கு சிறப்புற்று விளங்குகின்றனர். அதனுல் அந்த இசை அசையாத் தன்மையுடன் நிற்கிறது.

இசையின் வளர்ச்சிபற்றிய சரித்திரத்தை இரண்டாயிர வருடங்களுக்கு முன்பிருந்து இன்று வரை நூற்றூண்டு நூற்றூண்டாகத் தடங்கல் இல்லாதபடி வரைய இயலும். அங்ஙனம் வரையும்போது இருபதாம் நூற்றூண்டில் சங்கீத சாஸ்திர, சாஹித்ய வளர்ச்சியைப்பற்றிச் எழுத ஆரம்பித்தால் ஸ்ரீ முத்தையா பாகவதரவர்களுடைய

சேவையினையும் விசேஷமாக எழுதவேண்டும் என்பதிலே சிறிதும் ஐயம் இல்லை.

ஸ்ரீ முத்தையா பாகவதர் சங்கீத சாஸ்திர வளர்ச்சிக்குத் தாய்; பலவித ஸாஹித்யங்களின் சிருஷ்டிகர்த்தா; கதா காலக்ஷேபத்தின் போஷகர்; சங்கீத வினிகையில் சிறந்த மார்க்க தர்சி. இவ்வளவு பெருமைகள் இருந்தும் ஏதுமறியாதவர் போல் அடங்கியிருப்பதில் தருமபுத்திரர்.

இத்தகைய பெரியார் திருநெல்வேலி ஜில்லாவில் தோன்றி, மைசூர், திருவாங்கூர் சமஸ்தானங்களில் மாசற்ற இரத்தினம் போன்று புகழொளி பரப்பி, தமிழ் நாட்டிற்கே 'சங்கீத ஸம்ராட்' ஆக விளங்கினர். இவரது சரித்திரத்தை ஒவ்வொரு தமிழரும் சங்கீத ரஸிகரும் அறிய வேண்டும்.

---

## 2. முன்னேர்

திருநெல்வேலி ஜில்லாவிலே 'புனல்வேலி' என்றொரு அழகிய கிராமம் உண்டு. அது, அந்த ஜில்லாவில் சிறந்து விளங்கும் பல ஜமீன்களுள் ஒன்ருன சேற்றூருக்கு அருகிலுள்ளது. அவ்வூரிலே முத்துசுப்பையர் என்ற சிறந்த அந்தணரொருவர் வசித்து வந்தார். அவர் சம்ஸ்கிருதம், தமிழ் ஆகிய இரண்டு மொழிகளிலும் விசேஷ பாண்டித்யம் பெற்றவர். சங்கீதத்திலும் சிறந்த

பயிற்சி உண்டு. பல திறப்பட்ட வேதாந்த கீர்த்தனைகள் அவரால் இயற்றப்பட்டுள்ளன. வடமொழியிலே 'ஸம்க்ஷிப்த ராமாயணம்' என்ற எளிய நடையில் அமைந்துள்ள நூலை எழுதியவர் அவரே.

இறைவனருளால் அவர் நிறைந்த பொருட் செல்வம் பெற்று விளங்கினர். பல லக்ஷ ரூபாய் பெறுமானமுள்ள நிலங்களுக்கு அதிகாரியாக இருந்தார். அதனுல் அந்தப் பக்கத்திலே ஒரு சிறிய ஜமீன்தார் போலவே பெருமையுடன் வாழ்ந்து வந்தார்.

அக் காலத்திலே அவருக்கு எட்டுப் பெண்களும் மூன்று புதல்வர்களும் தோன்றினர். அந்த எட்டுப் டெண்களுள் ஆனந்தம் என்ற அம்மையாரே பாகவதரவர்களைத் தமிழ் நாட்டுக்கு ஈன்றளித்தவராவார்.

பொருட் செல்வமும் மக்கட் செல்வமும் பெற்ற முத்துசுப்பையர் வாழ்க்கை இன்பக் கடலிலேயே சென்றது. அவ்வின்பத்தை அறுபத்து நான்கு வருஷம் அனுபவித்துப் பின் இம்மண்ணுலகை நீத்தார். அதனுல் அந்தப் பெரிய குடும்பப் பொறுப்பு அவருடைய மூன்று புதல்வர்மேல் அமர்ந்தது. புதல்வரோ வயதில் மிகவும் சிறியவர். ஆயினும் தந்தைக்கேற்ற மக்களாக விளங்கிக் குடும்பத்தை நிர்வகித்தனர். அவர்களுள் ஸ்ரீ லக்ஷமண ஸூரியுவர்கள் குறிப்பிடத்தக்கவர்.

---

## 3. கொள்ளையர் தொல்லை

புனல்வேலி கிராமத்தில் முத்துசுப்பையர் குடும்பம் இன்பமாகக் காலம் கழித்து வந்ததெனினும் ஒருவிதத் தொல்லை அவ்வூர் மக்களிற் சிலரால் அதற்கு ஏற்பட்டுவந்தது. அக்காலத்தில் அரசாங்கக் கட்டுப்பாடும், போலீஸ் பந்தோபஸ்தும் மிகவும் குறைவு. எல்லா அதிகாரிகளும் பெயரளவிலே வேலை பார்த்துச் சம்பளம் வாங்கிக்கொண்டிருந்தார்களேயன்றித் தம் கடமையை ஒழுங்காகச் செய்யவில்லை. ஏனெனில், அக்கடமையை நிறைவேற்றுவதற்கு வேண்டிய மனோ தைரியமும் உடல் வலியும் அவர்களிடம் போதிய அளவு இல்லை. அதனால் அந்தப் பக்கத்திலுள்ள போக்கிரிகளிற் சிலர் கூட்டங் கூட்டமாய்க் கொள்ளையடிக்க ஆரம்பித்தனர். இக்கூட்டத்தினருக்குத் 'தீவர்த்திக் கொள்ளைக்காரர்கள்' என்பது பெயர். நடுநிசியிலே கூட்டமாகச் சேர்ந்துகொண்டு கூடைகளிலும் கோணிப் பைகளிலும் சிறு கூழாங்கற்களைச் சுமந்து கொண்டு வந்து கொள்ளையிட நினைந்திருக்கும் கிராமத்தில் வீசுவர். அவர்கள் கையில் தீவர்த்தி எரிந்துகொண் டிருக்குமாதலால் கிட்டத்தட்ட 'கொள்ளிவாய்ப் பிசாசு' போலவே காட்சியளிப்பர் எல்லோரும். இத்தகைய கோலத்துடன் அவர்கள் வந்து நள்ளிரவில் கொள்ளையிட ஆரம்பித்தாரானால் யார்தான் அவரை எதிர்த்து நிற்பர்? கொஞ்சம் தைரியத்துடன் யாராவது ஒருவர் அவரை எதிர்க்க நினைத்து வெளியே வருவாராயின் அடுத்த கணத்தில் அவர் தலையி

விருந்து இரத்தப் பிரவாகம் கிளம்பிவிடும். அந்தக் கொள்ளைக்கார் வீசுங் கற்களுக்கு அந்தத் தீரர்கள் தப்ப முடியாது. அப்படித் தப்பி அவர்களருகே சென்றுவிட்டாலும் அவர்கள் கையிலுள்ள குண்டாந்தடிக்கு இரையாக வேண்டியதுதான். இந்த நிகழ்ச்சிகளையெல்லாம் மனத்தில் எண்ணிக் கொண்டு ஒருவரும் அவர்கள் கொள்ளையிடுங் காலத்தில் வீட்டைவிட்டு வெளியே வரமாட்டார்கள். அதனல் அத்திருடர்கள் வைத்த பொருளை எடுத்துச் செல்வதுபோல் கிராமத்திலுள்ள விலையுயர்ந்த பொருள்கள் எல்லாவற்றையும் கொள்ளையிட்டுச் சென்றுவிடுவர். அதைப் பற்றிப் பின்பு விசாரணையும் இராது. அத்தீயவர்களைத் தேடித் தண்டிப்பவரும் கிடையாது.

இத்தகைய கொடுமைகள் சாதாரணமாக புனல்வேலி கிராமத்தின் அருகே அடிக்கடி நிகழ்ந்துவந்தன. வயலில் பாடுபட்டுப் பயிரிட்டவன் ஒருவனயிருப்பான். அதன் பலனை இரவிலே ஒருவருக்கும் தெரியாமல் எடுத்துச் செல்பவன் மற்றொருவனக இருப்பான். களத்திலே நெற்கதிரைத் தூற்றிக் குப்பை கூளங்களை நீக்கித் தானிய மணிகளாக வீட்டுக்குக் கொண்டு வருங் காலத்திலே வழியிலே வண்டியை மறித்துச் சூறையாடிவிட்டுப் போய்விடுவர் அந்தக் கொள்ளைக் காரர்கள்.

இந்தவிதமான கொடிய கஷ்டங்களினல் அவ்வூரில் இடர்ப்பட்டவர் எவ்வளவோ பேர்; பயந்து ஊரை விட்டு ஓடிப்போன குடும்பங்கள் அநேகம்.

அவைகளுள் முத்து சுப்பையர் குடும்பமும் ஒன்றாயிற்று.

முத்து சுப்பையர் இருந்தவரை அவருடைய தீரத்துக்கும் வலிமைக்கும் அத்தீயோர் அஞ்சி ஒடுங்கிக் கிடந்தனர். அவருடைய பூதவுடல் மறைந்ததும் அக்கொடியவர் ஓயாத் தொல்லை விளைக்க ஆரம்பித்தனர். முத்துசுப்பையர் புதல்வர்களால் பல லக்ஷ ரூபாய் விலை மதிப்புள்ள நிலங்களிலே விளையும் பலனை நிம்மதியாக அடைய முடியவில்லை. அறுவடைக்காலங்களிலே ஏற்படும்சச்சரவுகளுக்கு அளவே இராது. அவற்றைத் தாண்டி வீட்டுக்கு வந்து சேரும் தானியங்களும் ஏனைய பொருள்களும் மிகவும் குறைவாகவே இருக்கும். இதனால் அப்புதல்வர் மனம் உடைந்து அந்த ஊரைவிட்டு வெளியேறிவிடவேண்டும் என்றெண்ணித் தம் தாய் பிறந்த ஊராகிய ஹரிகேசநல்லூர் சென்று வாழலாம் என்று தீர்மானித்து, அதற்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்ய ஆரம்பித்தனர்.

---

## 4. ஹரிகேசநல்லூர் முத்தையா

இவ்வாறு துஷ்டரைக் கண்டு தூர விலக எண்ணிய அக்குடும்பத்தினர் நிலங்களையெல்லாம் மிகவும் தாழ்ந்த விலைக்கு விற்று ஹரிகேச நல்லூர் வந்து சேர்ந்தனர்.

ஹரிகேசநல்லூர் என்பது தாம்பிரவர்ணி நதியின் தென்கரையிலுள்ள சிறு கிராமம், கடலிலே

முத்துத் தோன்றும் வளத்தை அதிகமாகக் கொடுக்குந் தன்மை வாய்ந்த தாம்பிரவர்ணி நதி பாயும் பிரதேசத்தின் செழுமையை அறியாதவர் யார்? ஸ்ரீ லக்ஷ்மண ஸூரியவர்கள் அந்த நதியின் பாசனமாகவுள்ள நிலங்கள் கொஞ்சம் வாங்கித் தம் குடும்பத்தினைச் செந்நெறியிலே நடத்தி வந்தார். கொள்ளைக்காரப் புயலால் தடுமாறிய முத்து சுப்பையர் புதல்வருடைய வாழ்க்கைப் படகு தாம்பிரவர்ணி நதிக்கரையோரமாகவுள்ள ஹரிகேச நல்லூர்த் துறையிலே அமைதியாக வந்து நின்றது.

பிறகு தக்க காலத்திலே தம் சகோதரிகளுக்கு மணம் முடித்து வைத்தார் லக்ஷ்மண ஸூரிகள். அவர்களுள் ஆனந்தம் என்ற பெயருடைய சகோதரியை அவ்வூரிலேயே வாழ்ந்து வந்த லிங்கமையர் என்பவருக்கு மணமுடித்து வைத்தார். இவ்விரு பெரியோருக்கும் இரண்டு புதல்வரும், மூன்று புதல்வியரும் பிறந்தனர். அவ்விரண்டு புதல்வர்களுள் ஒருவரே ஸ்ரீ பாகவதரவர்கள். அவருடைய தாய் வழிப் பாட்டனாராகிய முத்துசுப்பையர் பெயரே அவருக்கு இடப்பட்டதாதலின் அவரை எல்லோரும் 'முத்தையா' என அழைத்தனர். இந்த முத்தையா உண்மையாகவே கடலிற் பிறந்த முத்துப் போலத் தமிழ் நாடெங்கும் ஒளிவிட்டுப் பிரகாசிக்கப் போகிறார் என்பதை அறிந்தே அவர்கள் அவ்வித நாமகரணம் செய்தனர் போலும். அந்தப் பெயருக்கு ஏற்றபடியே அவரும் தமிழ் நாட்டில் மாத்திரமல்லாமல், மைசூர், திருவாங்கூர் சமஸ்தானங்களிலும் முத்துப்போல் விளங்கினார்.

---

## 5. தந்தையார் பிரிவு

உலகில் தம்மைப் பெற்ற தாய் தந்தையரை நீண்ட காலம் கண்டு சேவை செய்யும் பாக்கியம் பெற்ற புதல்வர்களும், தம் புதல்வர் அடையும் மேன்மையையும் பெறும் புகழையும் கண் குளிரப் பார்த்துக் காது நிறையக் கேட்டு ஆனந்தமுறும் தாய்தந்தையரும் மிகச் சிலரே. பெற்றோரும் புதல்வரும் முற்பிறப்பில் அளவில்லாத நல்வினைகளைச் செய்திருந்தாலன்றி இத்தகைய பாக்கியங்களைப் பெறுவதில்லை. அவ்வித துர்ப்பாக்கியத்திற்கு முத்தையரும் இலக்கானார்.

முத்தையருக்கு எட்டாவது வயது, ஆரம்பமாகி இரண்டு மாதங்கள் கூட ஆகவில்லை. திடீரென்று அவருடைய தந்தையார் நோய்வாய்ப்பட்டார். வந்த நோய் மேன்மேலும் தன் வலியைச் செலுத்திற்று. அதற்குக் காலதேவனும் ஏற்ற உதவி செய்ய அந் நோய் விங்கமையரது ஆவியை எடுத்துச் சென்றது. பாவம்! என் செய்வர் முத்தையரும் அவருடைய சகோதரரும் சகோதரிகளும் தாயும்? கண்ணை இழந்தவரைப்போல் கதறினர். அப்போது அவருடைய அம்மானாகிய ஸ்ரீ லக்ஷ்மண ஸூரியவர்கள் தம் சகோதரிக்கும், தந்தையை இழந்து தவிக்கும் குழந்தைகளுக்கும் ஆறுதல் மொழிகள் கூறி உரிய கடன்களையெல்லாம் நிறைவேற்றினர். பின் எல்லோரையும் தம்முடன் சேர்ந்து வாழும்படி செய்தார்.

இவ்வாறு பெற்ற தந்தையினும் பதின்மடங் காகத் தம் அம்மானான லக்ஷ்மணஸூரிகள் காட்

டிய அன்பினுலும் ஆதரவாலும் முத்தையரும் பிறரும் தம் துயரை ஒருவாறு மறந்து வாழ்ந்து வந்தனர்.

---

## 6. ஸூரிகள் காட்டிய வழி

பின் தக்க வயதிலே ஸ்ரீ லக்ஷ்மணஸூரிகள் முத்தையருக்கு உபநயனம் செய்தார். இவ்விடத்தில் ஸ்ரீ லக்ஷ்மண ஸூரிகளைப்பற்றிக் கொஞ்சம் கூறவேண்டும்.

ஸ்ரீ லக்ஷ்மண ஸூரிகள் சிறந்த அறிஞர்; வடமொழியிலே மிகவும் பாண்டித்யம் நிறைந்தவர்; பழங்கால வடமொழிக் கவிகளைப் போன்று சுலோகங்கள் எழுதுவதிலும் நூல் இயற்றுவதிலும் மிகவும் சாமர்த்தியம் வாய்ந்தவர். வடமொழியில் அவர்கள் எழுதிய நூல்கள் எத்தனையோ உள; சிறந்த வடமொழி நூல்களுக்கு அவர்கள் எழுதிய உரைகள் பல; அதிகம் கூறுவானேன்?

1917-ல் அரசாங்கத்தார் இவர்களது புலமைத் திறத்தினையும் பரந்த அறிவையும் பாராட்டி 'மகாமகோபாத்தியாய' பட்டத்தையும், மைசூர் திவான் ஸ்ரீ சேஷாத்ரி ஐயரவர்கள் 'ஸூரி' என்ற பட்டத்தையும் அளித்தனர் என்றால் அவரது பெருமையை விளக்க வேறு சான்று என்ன வேண்டும்?

இத்தகைய பெரியார் ஆதரவில் இருந்த முத்தையருடைய கல்வியின் மேம்பாட்டைப்பற்றிக் கூற

வேண்டிய அவசியமில்லை. ஸ்ரீமான் ஸூரிகள் முத்தைய்ருக்குத் தக்க சாஸ்திர நூல்களைப் போதிக்கலானார். இவ்வாறு சில மாதங்கள் கடந்தன.

பின்பு ஸூரிகள் சாஸ்திரக் கல்வியை என்றும் தாமே கற்பிக்கலாமென்றும் முதலில் வேதாத்யயனம் செய்து வரட்டும் என்றும் ஆலோசித்து முத்தையர் அபிப்பிராயத்தைக் கேட்டார். அவர் அதற்குச் சம்மதிக்கவே 'வேதாத்யயனம் செய்ய யாரிடம் அனுப்புவது' என்று யோசித்தனர்.

அந்த நாளிலே திருவையாற்றில் முத்து கனபாடிகள் என்பவர் மிகவும் புகழ்பெற்று விளங்கினர். அவரிடம் வேதம் பயின்று வரும் வித்தியார்த்திகளுக்கு அவ்வூரிலே 'பாலாய் சத்திரம்' என்ற இடத்தில் இலவசமாக உணவளிக்க ஏற்பாடு செய்திருந்தனர் தார்மிக குணம் நிறைந்த சில பெரியோர். இவ்விஷயத்தை ஸூரியவர்கள் நன்கு அறிந்தவர்களாதலின் முத்தையரை அழைத்துக்கொண்டு திருவையாறு சென்று முத்து கனபாடிகளிடம் வேதாத்யயனம் பண்ண ஏற்பாடு செய்து ஊர் திரும்பினார்.

முத்தையரும் மாமாவின் சொல்லைத் தட்டாது முத்து கனபாடிகளிடம் பணிவாக நடந்து வேதம் கற்று வந்தார். மற்ற மாணவர்களைப்போல் பாலாய் சத்திரத்தில் உணவு அருந்தினார். இவ்வாறு சில வருஷங்களில் வேதத்தில் 'கிரமம்' வரை அத்யயனம் செய்தார்.

———

# 7. 'விளையும் பயிர்'

சங்கீத மும்மணிகளுள் ஒருவரான தியாகராஜ சுவாமிகள் வாழ்ந்து சித்தியடைந்த ஊராகிய திருவையாற்றிலே அக்காலத்தில் மகா வைத்திய நாதையர், பட்டினம் சுப்பிரமணிய ஐயர் முதலிய சங்கீத வித்வான்கள் வசித்து வந்தனர். வித்வான் கள் வாழும் இடத்தைத் தேடிக்கொண்டு இதர வித்துவான்கள் வந்து அளவளாவி மகிழ்ந்து செல் வது இயல்பல்லவா! அவ்வாறே இப்பெரியோர் களைக் காணத் திருவையாற்றுக்குத் தமிழ்நாட்டி லுள்ள பல சங்கீத வித்துவான்கள் வருவார்கள். அக்காலங்களில் சிறந்த சங்கீத வினிகைகள் நடை பெறும். அவ்விதம் நடக்கும் வினிகைகள் மிகவும் இனிமையாக இருக்கும் என்பது சொல்லாமலே விளங்கும். அப்போது, அதைக் கேட்டு இன்புற்று ஆனந்தக் கடலில் ஆழ்பவர் பலர். அவர்கள் பாடும் புதிய பாடல்களைக் கவனித்துக் கற்றுக்கொள்பவர் சிலர். ராகங்கள் பாடும் முறையினையும் நயமாக அதை விஸ்தரிக்கும் பண்பினையும் வேறு பல விசே ஷங்களையும் மிகவும் கருத்துடன் கூர்ந்து கவனித்து அதன்படி சாதகம்செய்து மேன்மையடைய நினைப் பவர் மிகச் சிலரே; இந்தக் கடைசி வகுப்பைச் சேர்ந்தவர் முத்தையர்.

அந்த வித்துவான்கள் வீடுகளில் நடக்கும் வினிகைகளுக்குத் தவறாமல் சென்று முத்தையர் கேட்பார். பின் தனிமையில் தான் கேட்டதைப் பாடிப் பார்ப்பார். அப்போது விளங்காத விஷயங் களை மறுநாள் சங்கீத சாஸ்திரம் அறிந்த ஒருவ

ரிடம் கேட்டு விளக்கிக்கொள்வார். இவ்வாறு அவர் தம் மனத்திலே சங்கீத விதையை ஊன்றி மெல்ல மெல்ல அதை முளைவிட்டு வளரும்படி செய்தார். கேள்வி ஞானம் அவரது சங்கீத வித்து முளைக்கத் தண்ணீர்போல் உதவிற்று. அவரும் அதைப் பக்குவமாகப் பாதுகாத்துப் போற்றிவந்தார். இதைக் கண்ட அவ்வூர்ப் பெரியோர் சிலர், 'முத்தையா! உனக்குச் சங்கீதத்தில் நல்ல ஞானம் இருக்கிறது. அந்த சாஸ்திரத்தை இப்படிக் கற்றால் போதாது; தக்க வித்துவான்களிடம் முறைப்படி கற்றுச் சாதகம் செய்யவேண்டும்' என்று கூறினர். அதைக் கேட்ட முத்தையர் அவ்வார்த்தைகளை மனத்துட் கொண்டு அவ்வூரில் வாழ்ந்துவந்த **சாம்பசிவ ஐயர்** என்பவரிடம் தமக்குச் சங்கீதம் கற்றுக் கொடுக்கும்படி பணிவுடன் கேட்க, அவரும் இவரது ஆர்வத்தைக் கண்டு வியப்புற்று மகிழ்ந்து இசைந்தனர். அன்றுமுதல் அவரிடம் முத்தையர் சங்கீதம் கற்றுக்கொள்ளத் தொடங்கினர்.

---

## 8. சாம்பசிவ ஐயர்

சாம்பசிவ ஐயர் பரம்பரையாகச் சங்கீதச் செல்வம் படைத்த குடும்பத்தில் தோன்றியவர். அவருடைய தந்தையார் பெயர் துரைசாமி ஐயர் என்பது. அவர் திருவிடைமருதூரைச் சேர்ந்தவராதலின் எல்லோரும் அவரை மத்தியார்ஜுனம் துரைசாமி ஐயர் என்றே அழைப்பர். அவர் பல்லவி பாடுவதில் மிகவும் திறமை பெற்றிருந்த காரணத்

தினுல் பல்லவி துரைசாமி ஐயர் என்றும் கூறுவர். அக்காலத்தில் தஞ்சை அரசரான துளஜா மஹாராஜாவின் சமஸ்தான வித்துவாஞக அவர் விளங்கினுர். துரைசாமி ஐயருடைய தந்தையார் சபாபதி சிவன் எனப்படும்பெரியோர். இவர் சங்கீத தெய்வம் போல் விளங்கிய ஸ்ரீ. தியாகராஜ சுவாமிகளின் சிறந்த சிஷ்யர். அதனுல் அவருடைய சங்கீதத் திறமையைப்பற்றி எடுத்துச் சொல்லாவண்டிய அவசியமில்லை.

இவ்விதமாகச் சங்கீதத்தை உபாசித்து வரும் குடும்பத்தில் தோன்றிய சாம்பசிவ ஐயர் தம் முன்னேருடைய பெருமையிலிருந்து கொஞ்சமும் குறைந்தவரல்லர். தம் முன்னேர் போற்றி வளர்த்த கீர்த்தி ஸ்தம்பம் சிறிதும் பழுதடையாதபடி தாமும் பாதுகாத்துவந்தார்; இத் தன்மை வாய்ந்தவரைக் குருவாகப் பெற்ற முத்தையருடைய பாக்கியத்தைப் புகழ்வதா, தம் சங்கீத வித்தையைச் சரியான பாத்திரத்தில் பிரயோகிக்கும் பேற்றினைப் பெற்ற சாம்பசிவ ஐயருடைய சிறப்பினைப் புகழ்வதா? முத்தையர் தமக்குக் கிடைத்தற்கரிய குரு கிடைத்தார் என்று மிகவும் சிரத்தையுடனும் பக்தியுடனும் சங்கீத அப்பியாசம் செய்தார். சாம்பசிவ ஐயரும் முத்தையருடைய ஆர்வத்தையும் அன்பையும் அடக்கத்தையும் கண்டு மிகவும் உற்சாகத்துடன் போதித்து வந்தார். இவ்வாறு இருவரும் ஒத்து இயங்கிய காரணத்தாலே முத்தையருடைய சங்கீத ஞானம் மிகவும் குறுகிய காலத்திலேயே நல்ல வளர்ச்சியைப் பெற்றது. இதைக் கண்டு சாம்பசிவ ஐயர் மனம் பூரித்தார். முத்தையர்

தமக்கு வாய்த்துள்ள சாரீரத்தினையும் சங்கீத ஞானத்தையும் நினைத்துக் கர்வம் கொள்ளாதபடி பத்து வருஷ காலம் அவர்களிடம் சிஷ்யராக இருந்து சங்கீதம் கற்றார். அதனால் தீபத்திலிருந்து ஏற்றப்பட்ட தீபம்போல் அவரது சங்கீத சாஸ்திர ஞானம் நல்ல ஒளி பெற்று விளங்கியது.

---

## 9. சென்னைப் பயணம்

சாம்பசிவ ஐயரை அடிக்கடி சென்னை நகரத்திலுள்ள சங்கீதாபிமானிகள் விசேஷ வினிகைக்காக அழைப்பார்கள். அப்போது அவர் சென்று தமது பிடில் வாத்தியத்தின் இனிமையினால் கேட்போரை மகிழ்வித்துப் பல சம்மானங்கள் பெற்று வருவார். சில சமயம் அவ்வாறு சென்னைக்குப் போகும்போது தம்மிடம் பயிலும் சிஷ்யருள் சிலரையும் அழைத்துச் செல்வார். ஒரு முறை அவர் தம் புதல்வரையும் முத்தையரையும் அழைத்துக்கொண்டு சென்னைக்கு வந்தார். அப்போது புரசைபாக்கத்திலே ஒரு தனி வீட்டில் அவர்கள் தங்கியிருந்தனர். சங்கீத வினிகை நடக்கும் நேரங்களில் இருவரையும் அவர் தம்மோடு அழைத்துச் செல்வார். சிலநாள் தம் புதல்வரை மாத்திரம் அழைத்துச் செல்வார். அப்போது முத்தையர் தனிமையாகவே இருப்பார்.

---

## 10. அன்பும் ஆதரவும்

ஒரு நாள் சாம்பசிவ ஐயரும் அவர் குமாரரும் வெளியே போயிருந்தனர். அப்போது மாலை நேரம் வீட்டில் தனிமையாக இருந்த முத்தையர், 'மெல்ல இந்த ஊரைச் சுற்றிப் பார்க்கலாமே' என்று எண்ணி வெளியே புறப்பட்டார். இவர்கள் இறங்கி இருந்த வீட்டிற்கு நாலைந்து வீடுகளுக்கப்புறம் ஒரு பெரிய கனவானுடைய வீடு இருந்தது. அவ் வழி யாகச் சென்ற முத்தையர் அந்த வீட்டின் அழ கைப் பார்த்துக்கொண்டு சற்று அங்கு நின்றார்.

அந்த வீட்டின் வாசற்புறத்திலே ஒருவர் நின்றுகொண்டிருந்தார். அவருடைய தோற்றத்தி லிருந்து அவர் அந்த வீட்டுச் சமையற்காரர் என் பதை யாரும் எளிதில் கண்டு பிடிக்க முடியாது. நடை, உடைகளிலிருந்து அவரேதான் அவ் வீட்டு எஜமானரோ என்று கருதும்படி இருந்தார். அவ் வாறு இருந்தமை கர்வத்தாலும் தம்மைச் சமையற் காரன் என்று பிறர் எண்ணக்கூடாது என்ற கருத்தினாலும் அல்ல. அவர் சாதாரணமாகப் படித் தவர்; நல்லொழுக்கம் வாய்ந்தவர்; சங்கீதத்தில் கொஞ்சம் பயிற்சியுள்ளவர். இத்தன்மைகளெல் லாம் அவரைக் கொஞ்சம் மேன்மைப்படுத்தின.

அந்தச் சமையற்காரர் தாமிருக்கும் வீட்டு வாசற்பக்கம் முத்தையர் வந்தவுடனே அவரைக் கைதட்டிக் கூப்பிட்டார். எங்கோ பார்த்துக் கொண்டிருந்த முத்தையர் 'தம்மை இவ்வூரில் கூப் பிடுவது யார்' என்று வியப்புற்றுப் பார்த்தார்

அவர், 'உம்மைத்தான் ஐயா; இங்கே வாரும்' என்று மறுபடியும் அழைத்தார். முத்தையர் மெல்ல அவரருகே சென்றார். பின் இருவருக்கும் சம்பாஷணை நடந்தது.

சமையற்காரர்:—பிடில் வித்துவான் சாம்பசிவ ஐயருடன் வந்திருப்பவர் தானே நீர்?

முத்தையர்:—ஆம்; அதெப்படி உங்களுக்குத் தெரிந்தது?

சமை:—இதை அறிவது மிகவும் கடினமா? நீர் அவர்கள் பின் அடிக்கடி செல்வதைப் பார்த்தேன்; அதனால் கேட்டேன். நீர் அவருடைய........

முத்:—சிஷ்யன். மற்றொருவர் இருக்கிறாரே, அவர்தான் அவருடைய புதல்வர்.

சமை:—சிஷ்யரா நீர்? எவ்வளவு காலமாக அவர்களிடம் சிஷ்யராக இருக்கிறீர்கள்? அவர்கள் அடிக்கடி இவ்வூருக்கு வருவார்களே, அப்போதெல்லாம் நீர் காணப்படுவதில்லையே?

முத்:—பத்து வருஷ காலமாகப் பயில்கின்றேன். இவ்வூருக்கு வந்தது இதுதான் முதல் தடவை. என்னவோ இம்முறை கிருபை வைத்து அழைத்துவந்தார்கள்.

சமை:—பத்து வருஷ காலம் சங்கீதம் பயின்றிருந்தால் உமக்கு நல்ல தனி வினிகை நடத்தத் தக்க ஞானம் வந்திருக்கலாமே!

முத்:—நடத்தலாம் என்று எனக்குத் தோன்றுகிறது. ஆனால் மனத்தில் தைரியம் ஏற்படவில்லை.

சமை:—சரிதான் போம்! தைரியம் இல்லை என்று இப்படி உட்கார்ந்து கொண்டிருப்பார்களா? தைரியம் என்ன நினைத்தவுடனே வந்துவிடுமா? அல்லது கடையில்தான் வாங்கக் கிடைக்குமா? நாலு இடங்களில் பாடினீரானல் தைரியம் தானகவே வருகிறது. தைரியம் இல்லை என்கிறீரே! ஒரு பாட்டுப் பாடும் கேட்போம்.

இதைக் கேட்ட முத்தையருடைய மனத்தில் ஏதோ ஒருவித சக்தி வேலை செய்தது. ஒருவாறு ஊக்கங்கொண்டு பாட ஆரம்பித்தார். முதலில் மெதுவாக ராக ஆலாபனை செய்து ஒரு கீர்த்தனத்தையும் பாடினர். முத்தையருடைய கானத்தைக் கேட்ட அச்சமையற்காரர் அப்படியே ஸ்தம்பித்துவிட்டார்.

"என்ன ஐயா! இவ்வளவு அருமையான சாரீரத்தையும் ஞானத்தையும் வைத்துக்கொண்டு இப்படிக் குடத்திலிட்ட விளக்குப் போலிருக்கிறீர்களே! பலர் கேட்டு அனுபவித்து அளவிலா ஆனந்தம் அடையத் தக்க இப்பெரிய செல்வத்தைப் பயன் படுத்தாது பூட்டி வைத்திருக்கிறீர்களே! இது சங்கீத தெய்வத்தைச் சிறையிலிட்டிருப்பது போலல்லவா இருக்கிறது! நான் இந்த வீட்டுச் சமையற்காரன்; எனக்குச் சங்கீதத்தில் நல்ல பயிற்சி உண்டு. நானும் எத்தனையோ பேர் பாடிக் கேட்டிருக்கிறேன். இதுவரை இப்படிப்பட்ட பாட்டைக் கேட்டதே இல்லை. நீங்கள் தினந்தோறும் சாயங்காலம் இங்கே வந்துவிடுங்கள். நாம் இருவரும் பாடி ஆனந்திக்கலாம். என் யஜமானரிடம்

உங்களைப்பற்றிச் சொல்லி அறிமுகப்படுத்து கிறேன். அவரும் சங்கீதத்தில் விசேஷ அபி மானம் கொண்டவர். நான் அவருக்குச் சாதமும் போடுவேன், கீதமும் பாடுவேன். அதனால் என் னிடம் அவருக்கு மிக்க அன்பு உண்டு. தவறாமல் நாளை வாரும்'' என்று சொல்லி அனுப்பினார் அச் சமையற்காரர்.

'ஆகா! என்ன அன்பு! அன்பு மனத்தில் மாத்திரம் இருந்தால் போதுமா? அதை எடுத்துக் காட்டிப் பரிவுடன் பேசினாலல்லவா அதன் பெருமை விளங்கும்! இதுவரை என்னையும் என் சங்கீதத்தையும் இப்படிப் புகழ்ந்து எனக்கு ஊக் கம் உண்டாகும்படி பேசியவர் ஒருவருமில்லையே! உண்மையாகவே என் பாட்டு நன்றாக இருக் கிறதா? அவர் என்னை முன்பின் அறியாதவரா யிருந்தாலென்ன? அன்பிலும் இனிய பேச்சிலும் அன்னையையும் தந்தையையுமல்லவா விஞ்சிவிட் டார்! எவ்விதமானாலும் சரி, ஒருவரையும் அறியாத இந்த ஊரிலே நமக்குச் சரியான துணைவர் அகப் பட்டார். தவறாமல் நாளை மாலை போவதே நல்லது." என்று பலவாறு ஆலோசித்துத் தீர்மானித்துக் கொண்டார் முத்தையர்.

அன்று முதல் மாலையில் அந்தச் சமையற்கார ரைப் போய்ப் பார்ப்பதில் சிறிதும் தவறுவதில்லை. இவ்வாறு நான்கு நாட்கள் சென்றன.

---

## 11. முதல் வினிகை

ஐந்தாவது நாள் காலை. சமையற்காரர் வேலை செய்யும் கனவான் வீட்டிலே மேளதாளங்கள் ஒலித்தன. சென்னை நகரப் பெரிய மனிதர்கள் வருவதும் போவதுமாக இருந்தனர். அன்று அந்த கனவானுடைய பெண்ணின் ஆண்டு நிறைவு ஆதலின் இவ்வளவு கோலாகலமாய் இருந்தது.

சமையற்காரர் மெதுவாக யஜமானர் அருகே வந்து, "இவ்வளவு சிறப்பாக விசேஷம் நடைபெறுகிறது; எவ்வளவோ பெரிய கனவான்கள் வந்து போய்க்கொண்டிருக்கின்றனர்; இச்சந்தர்ப்பத்தில் ஒரு நல்ல சங்கீத வினிகையும் நடைபெற்றால் எவ்வளவு சோபிக்கும்! இந்திரலோகம்போல் விளங்குமல்லவா!" என்று பக்குவமாகச் சொன்னார்.

யஜமானர் :—ஆம். நன்றாகத்தானிருக்கும். ஆனால் இந்த அவசரத்தில் யாரைத் தேடிப் பிடிப்பது?

சமை :—ஒருவரையும் தேடிப் போகவேண்டாம்.

யஜ :—என்ன! நீயே பாடிவிடலாம் என்ற எண்ணமோ!

சமை :—அவ்வளவு யோக்கியதை ஏது எனக்கு? இளைஞரொருவர் சாம்பசிவ ஐயருடன் வந்திருக்கிறார். அவருடைய சிஷ்யராம். இரண்டு நாளைக்கு அவர் பாடக் கேட்டேன். என் பாட்டையே மிகவும் பிரமாதமாகப் புகழ்ந்து பேசுகிறீர்களே! அவருடைய கானத்தைக் கேட்டுவிட்

டால் தலையில் வைத்துத்தான் கூத்தாடுவீர்கள். அவர் பாட்டைக் கேட்கும் சபையோர் இரவில் நடக்கவிருக்கும் விருந்தைக்கூட மறந்துவிடுவார்கள். இதெல்லாம் நான் சொல்லிச் சாத்தியமில்லை. அவரை நீங்கள் பார்த்தாலே போதும் - என்று சொல்லிக்கொண்டிருக்கும்போதே அவ்வீட்டு வாசலில் வழக்கம்போல் முத்தையர் வந்தார். 'அதோ அவர்தான் நான் சொன்ன இளைஞர்; என்று கூறி வாசலில் வந்து முத்தையரைக் கனவானிடம் அழைத்துச் சென்றார்.

முத்தையரது தோற்றத்திலிருந்தே சமையற்காரர் சொல்வதெல்லாம் உண்மையாகத்தான் இருக்கும் என்று அறிந்துகொண்ட அத்தனவான், "உம்மைப் பற்றித்தான் இவ்வளவு நேரம் பேசினர். மிகவும் நன்றாகப் பாடுகிறீராமே? ஒரு பாட்டுப் பாடும், கேட்கலாம்" என்று அன்பு ததும்பக் கூறினர். அப்படியே ஒரு பாட்டுப் பாடினர் முத்தையர்.

தனவந்தர் அந்தப் பாட்டைக் கேட்டுப் பிரமித்துப்போய், "என்ன சாரீரம்! என்ன சாரீரம்!! இவ்வளவு நன்றாகப் பாடுவீர் என்று அவர் சொல்லவில்லையே! ஏதோ சாதாரணமாக இருக்குமென்று நினைத்தேன்; வைத்துவிட வேண்டியதுதான் இன்று மாலை சங்கீத வினிகை; தயாராக வந்துவிடும் நாலரை மணிக்கு; பக்க வாத்தியங்கள் நான் வரவழைக்கிறேன்" என்று கூறி உற்சாகப்படுத்தி அனுப்பினர். உடனே, மாலை சங்கீத வினிகை நடக்கப்போகிற செய்தியைத் தமக்குத் தெரிந்த

பல பெரியோர்களுக்கும் நண்பர்களுக்கும் அறிவித்தார்.

இச்செய்தி அந்த வட்டாரமெங்கும் பரவியது. மாலை நேரத்தில் பெரிய கூட்டம் கூடிவிட்டது. முத்தையரும் சரியாக நாலரை மணிக்குப் பாட ஆரம்பித்தார். 'இவ்வளவு பேர் இன்று நம் பாட்டைக் கேட்கிறார்களே' என்ற ஆனந்தத்தால் மிகவும் உழைத்துப் பாடினர். அமுத தாரைபோல ராக ஆலாபனை செய்தார். நவரத்தினங்களை வாரி இறைப்பதுபோல ஸ்வரங்களைச் சிதறினர்; பாவம், ராகம், தாளம் எல்லாம் ஒருமிக்கப் பொருந்த சங்கீத வினிகை மிகவும் உச்சநிலையை அடைந்தது.

கேட்போர் தம்மை யறியாமலே ஆனந்தத்தால் ஹாஹாகாரம் செய்தனர். அடிக்கடி கரங்கள் தட்டிக் கோஷித்தனர். இளகிய மனதுள்ளவர்கள் கண்களில் ஆனந்த பாஷ்பத்தைப் பெருக விட்டனர். எல்லோரும் சித்திரத்தி லமைந்த உருவம்போல் அசையாதபடி இன்னிசையைப் பருகி அனுபவித்துக் கொண்டிருந்தனர்.

இரவு எட்டுமணிக்குக் கச்சேரி முடிந்தது. உடனே அந்தவீட்டுக் கனவான் எழுந்து முத்தையரைப் புகழ்ந்து பேசி ஒரு வெள்ளித் தட்டில் ஒரு ஜோடி வேஷ்டியும் நிறைய வெள்ளி நாணயங்களும் வைத்து முத்தையருக்குக் கொடுத்தார்.

எதிர்பாராத இத்தனை வைபவங்களையும் பகுமானங்களையும் கண்ட முத்தையருடைய ஆனந்தம் எல்லைமீறி நின்றது. 'இவ்வளவு பெரிய மனி

தர்கள் அளிக்கும் கௌரவத்தை நினைத்து மகிழ்வதா? பாடிய காலத்திலே தம் கரகோஷங்களாலும் தலையாட்டங்களாலும் தம்மை ஊக்கமடையச் செய்த உயர்ந்தோர்களின் அன்பைக் கண்டு மகிழ்வதா? இவை எல்லாவற்றுக்கும் காரணமான சமையற்காரரை நினைத்து மகிழ்வதா? என்று அறியாமல் தத்தளித்தார். கடைசியில் இவற்றையெல்லாம் நிகழ்வித்த எம்பெருமானது திருவருள் திறத்தினைப் புகழ்ந்துகொண்டு விடைபெற்று வீடுவந்து சேர்ந்தார்.

அச்சமயம் அவருடைய குரு சாம்பசிவ ஐயரும் அவர் குமாரரும் எங்கேயோ போயிருந்தனர். கொஞ்ச நேரத்தில் அவர்கள் திரும்பிவர, முத்தையர் தமக்குக் கிடைத்த பரிசுகளைக் குருவினுடைய பாதத்தில் சமர்ப்பித்து வணங்கி, நிகழ்ந்த விஷயங்களெல்லாவற்றையும் கூறினர்.

தம்முடைய சிஷ்யன் மிக்க கௌரவத்தைப் பெற்றான் என்ற விஷயத்தைக் கேட்ட குருவின் மனநிலையை எடுத்துக்கூற இயலுமோ? அவ்வளவு மகிழ்ச்சி பொங்கி அலைமோதும் அந்த ஆசிரியர் மனக்கடலிலே திடீரென ஒரு பெரும்புயல் மோதும்படி எதிர்பாராத சம்பவமொன்று நிகழ்ந்தது. அப்புயலால் பலவிதத்திலும் துன்பமடைந்த முத்தையர் மனமுடைந்து, (1893-இல்) அன்றிரவே அவ் வீட்டைவிட்டு அகன்றார்.

——

## 12. இருளிலும் ஒளி

தாயும் தந்தையும்போல விளங்கிய சாம்பசிவ ஐயரிடமிருந்து தம்மைப் பிரித்த விதியை மூத்தையர் பல திறனுக நொந்தார். நொந்து என்ன பயன்? ஆசிரியரை விட்டுப் பிரிந்து வந்து விட்டோம்; இனி நமக்குத் துணை யார்? நம்மை ஆதரிப்பவர் யார்? இவ்வளவு பெரிய நகரிலே எங்கு யாரைக் கண்டு பேசுவது? எந்த விதமாகப் பிழைப்பது? என்று மனத்தில் பற்பல எண்ணங்கள் தோன்றி அவரை வாட்டின. கடைசியில் அந்தச் சமையற்காரரைப் போய்ப் பார்த்தால் ஏதாவது யோசனை சொல்லுவார் என்று எண்ணி நேராக அவரைத் தேடிச்சென்று கண்டு எல்லா விஷயங்களையும் விவரமாகக் கூறினர்.

“பூ, இவ்வளவு தானு? உமக்கென்ன ஐயா கவலை? வித்தையை வைத்துக் கொண்டிருக்கிறீர்; நாலு இடங்களில் அதைக் காட்டினீரானல் எல்லோரும் உம்மைத் தலையில் வைத்துக் கொண்டாட மாட்டார்களா? தைரியமாக இரும், நான் இருக்கிறேன் உமக்குத் துணை” என்றூர்.

“அப்படியல்ல; எனது அரைகுறை வித்தையை அரங்கத்தில் ஏற்றி அவமானப் படக்கூடாது. இன்னும் எவ்வளவோ நான் கற்கவேண்டும். அதிலே என் மனம் ஓடுகிறதே யன்றி அரங்கேற்றத்தில் செல்லவில்லை. உமக்குத் தெரிந்த சிறந்த சங்கீத வித்துவான்கள் இருந்தால் அவர்களுடைய பழக்கத்தை எனக்கு ஏற்படுத்தும்’ என்று சொன்னர் மூத்தையர்.

"ஆம், அதுவும் சரியே" என்று கூறித் தலையைச் சொறிந்து யோசித்தார், அந்தச் சமையற்காரர். பிறகு, "ஆம், இருக்கிறார், வேலூரில் எனக்குத் தெரிந்த சிறந்த ஒரு சங்கீத வித்துவான்; தோண்டு ராவ் என்பது அவர் பெயர். அவரைப் போய்ப் பாரும், ஏதாவது பயன் கிடைக்கும்" என்று கூறி உடனே அனுப்பினர்.

இருளிற் தவிப்பவனுக்கு ஒளியைக் காட்டி உதவுவது போல் ஈசன் இந்தச் சமையற்காரரை நமக்கு உதவி செய்ய அனுப்பி இருக்கிறார் போலிருக்கிறது; எப்படியானல் என்ன? அவனருளே நமக்கு வேண்டும், என்றெண்ணி அன்றிரவே முத்தையர் வேலூர் செல்லப் புகை வண்டியில் ஏறினர்.

---

## 13. விதியின் வேலை

வேலூர் நோக்கி வேகமாகப் போய்க்கொண்டிருந்த புகைவண்டி காட்பாடி நிலயத்தில் வந்து நின்றது. அப்போது காலை நேரமாதலின் முத்தையரைப் பசி மிகவும் வாட்டியது. அதனல் ரயிலிலிருந்து இறங்கிப் பிளாட் பாரத்திலிருந்த உணவுச் சாலையுள் நுழைந்தார். அங்கிருந்த பையன் முத்தையருக்கு வேண்டிய உணவுகளை எடுத்துக் கொடுக்கச் சிறிது நேரமாயிற்று. இன்னும் கொஞ்ச நேரத்தில் வண்டி புறப்பட்டு விடுமே, என்று பரபரப்புடன் முத்தையர் அவசரமாக உணவை யுண்டார். ஆயினும் வண்டி அவ்வளவு

நேரங்கூட நில்லாதபடி 'கூ' என்று ஊதிப் புறப் பட்டு விட்டது. அதைக் கண்ட முத்தையர் அரை குறையாகக் கை கழுவிக் கொண்டு ஓடி வந்து ரயிலேப் பிடித்து ஏற முயற்சித்தார். ஆனால் அங்கு நின்ற ஸ்டேஷன் அதிகாரி 'என்ன ஐயா! இவ்வளவு சாவகாசம்? உமக்காக வண்டி நிற்குமா? கீழே விழுந்துவிடப் போகிறீர்; அடுத்த வண்டியில் போகலாம்' என்று கூறி முத்தையரின் கையைப் பிடித்திழுத்து நிறுத்திவிட்டார். வண்டி விரை வாகப் போய் விட்டது. முத்தையர் தம் விதியை நொந்து கொண்டு 'சிவனே' என்று பிளாட் பாரத் தில் உட்கார்ந்து விட்டார்.

ஒரு மணி நேரம் சென்றது. ஸ்டேஷனெங் கும் ஒருவிதப் பரபரப்பு உண்டாயிற்று. இதைக் கண்ட முத்தையர் அருகிலிருந்த போர்ட்டரிடம் விஷயத்தை விசாரிக்க அவன் கொஞ்சம் முன்னல் போன வண்டி கவிழ்ந்து விட்டதென்றும் அதனல் பலபேர் மாண்டனரென்றும் கூறினன்.

இவ்விஷயத்தைக் கேட்ட முத்தையர் பிரமித்து விட்டார். 'ஆகா! என்னே விதியின் விளையாட்டு! ஸ்டேஷனதிகாரி என்னைப் பிடித்திழுத்து நிறுத்தி யிராவிட்டால் நான் இன்று உயிர் இழந்திருக்க வேண்டியவ னன்றோ? அந்த உணவுச் சாலைப் பையனும் ஸ்டேஷனதிகாரியுமல்லவா, இன்று நமக்குக் காத்திருந்த நமனிடமிருந்து தப்புவித்த வர்! தலைக்கு வந்தது தலைப்பாகையோடு போயிற்று என்றபடி உயிருக்கு வரவிருந்த ஆபத்து சிறு மூட்டையோடு போயிற்று' என்று

மகிழ்ந்து இறைவன் திருவருளைச் சிந்தித்து வியந்தார்.

பின் மறுநாள் காலையில் அங்கிருந்து புறப்பட்டு வேலூர் வந்து தோண்டு ராவைச் சந்தித்தார்.

---

## 14. 'உமக்கு நீரே குரு'

தோண்டு ராவ் சங்கீதத் தேனில் ஊறிய இனிய பழம்; நல்ல சாரீரம் படைத்தவர். ஒருதரம் கேட்டவர் காதிலே அவருடைய பாட்டு எப்பொழுதும் ஒலித்துக்கொண்டே இருக்கும். அவ்வளவு கனமும், நயமும், இனிமையும், அனுபவமும் முதிர்ந்த தொண்டு ராவ் வயதிலும் முதிர்ந்து தொண்டு கிழமாகிவிட்ட காரணத்தால் சங்கீதத்தைத் தம்மளவிலேயே நிறுத்திக் கொண்டிருந்தார். ஆதலின் அவரைத் தேடி ஒருவரும் வருவதில்லை.

இந்நிலையில் அவர் வாழ்ந்த காலத்தில்தான் முத்தையர் அவரைத் தேடிச்சென்று தாம் வந்த காரணத்தைக் கூறினர்.

"அப்படியா! இந்தக் கிழவனுக்கும் மரியாதை வைத்து வருகிறவர்கள் இருக்கிறார்களா? சரி. எங்கே ஒரு பாட்டுப் பாடும், கேட்போம்" என்று கூறித் தம் கிழத்தனத்தையும் மறந்து நிமிர்ந்து உட்கார்ந்து கொண்டார்.

முத்தையரும் அவர் விருப்பப்படி நிதானமாகப் பாடினர். கேட்டார் தோண்டு ராவ். "ஆகாகா! என்ன பாட்டு! என்ன சாரீரம்! ஏன் ஐயா, உம்முடைய சங்கீதம்தான் பண்பட்டு விட்டதே! இன்

னும் என்ன கற்றுக்கொள்ள வேண்டியிருக்கிறது? இதில் காற்பங்கு ஞானங்கூட இல்லாத பேர் வழிகள் இக்காலத்தில் பெரிய பாடகர் என்று பெயரைச் சொல்லிக்கொண்டு கிளம்பி விட்டார்களே! உமக்கென்ன கவலை? ஆரம்பியும் கச்சேரி செய்ய," என்று விறுவிறுப்பாகப் பேசினர்.

"இருக்கலாம், ஆயினும் இன்னும் சில பெரியோர்களுடன் சேர்ந்து பழகவேண்டும் என்ற ஆர்வம் இருக்கிறது. ஏதாவது தாங்கள் உதவி செய்யவேண்டும்" என்று வேண்டிக் கொள்ள, "பரனும்பேட்டையில் அருணசல ஐயர் என்ற பெரிய கனவான் இருக்கிறார். அவருக்கு நான் ஒரு கடிதம் தருகிறேன், அதைக் கொண்டுபோய் அவரைப் பாரும்; ஏதாவது செய்வார்" என்று ஒரு கடிதம் எழுதிக் கொடுத்தனுப்பினர்.

முத்தையர் அக்கடிதத்தைப் பெற்றுச்சென்று அருணசல ஐயரைப் பார்க்க, அவரும் தோண்டுராவைப் போலவே, 'உமக்குக் கற்றுக் கொடுக்கத் தக்க ஆசிரியர் இனி இல்லை. உமக்கு நீரேதான் குரு; உம்முடைய உழைப்பினாலும் சாதகத்தாலுமே இன்னும் அதிகப் பண்பாட்டை அடையும் உமது சங்கீத ஞானம்' என்று கூறி அங்குச் சில வினிகைகள் வைத்துத் தக்க சம்மானம் செய்து அனுப்பினர்.

முத்தையர் அதைப் பெற்றுக் கொண்டு மீண்டும் தம்முடைய பழைய ஆசிரியரான சாம்பசிவ ஐயரைக் காண வேண்டும் என்ற அவாவோடு திருவையாற்றினை நோக்கி வந்தார்.

## 15. குரு அஸ்தமனம்

வரும் வழியில் திருவாவடுதுறையில் ஒரு நாள் தங்கி, அப்போது அங்குக் கல்வி பயின்று கொண்டிருந்த வேதாந்த பாகவதரோடு அளவளாவி மகிழ்ந்து மறு நாள் வைகறையில் நாலு மணிக்குத் திருவையாறு நோக்கிப் புறப்பட்டார்.

திருவாவடுதுறையிலிருந்து திருவையாறு ஆறுமைல் தூரம் உள்ளது. அவ்வளவு தூரம் நடந்து செல்ல நேரமாகுமே என்று அவர் மனம் தவித்தது. அப்படியே பறந்து போய்த் தம் குருவை பார்க்கவேண்டும் என உடலைத் தூண்டியது. அதனால் தாயைத் தேடி வரும் கன்று போல் ஓட்டமும் நடையுமாக ஆறுமைலையும் ஆறு அடியாக நினைத்துத் தாண்டி வந்தார் திருவையாற்றினை நோக்கி.

திருவையாற்றின் எல்லையை முத்தையர் அடைவதும் பொழுது புலர்வதும் ஒரே சமயத்தில் நிகழ்ந்தன. அப்போது சில அந்தணர்கள் கிராமத்திலிருந்து வந்து கொண்டிருந்தனர். அவர்களுள் ஒருவரை முத்தையர் அழைத்து, "என்னைத் தெரிகிறதா?" என்றார்.

"ஓ! முத்தையனா? வா; இவ்வளவு நாளாக எங்கே போயிருந்தாய்" என்று பரிவோடு விசாரித்தார் அப்பெரியவர்.

"அதெல்லாம் பெரிய கதை; அதிருக்கட்டும்; அண்ணா அவர்கள் சௌக்கியந்தானே" என்று ஆர்வத்தோடு கேட்டார் முத்தையர்.

'அண்ணாவா? யார், சாம்பசிவ ஐயர் தானே? உனக்குத் தெரியாதா சமாசாரம்? அடாடா, அவர் காலமாகி இன்று தான் பத்தாவது நாள், நம் மெல்லோரையும் விட்டுவிட்டு அவர் ஈசன் திருவடிகளை அடைந்து விட்டார்' என்று கண்களில் நீர் ததும் பத்தழுதழுத்த குரலில் கூறினர்.

'ஹா! என்ன'! அண்ணா அஸ்தமித்து விட்டாரா? ஐயோ! அந்திய காலத்தில் அவரருகில் இல்லாதபடி எங்கேயோ அலைந்து கொண்டிருந்தேனே' என்று அலறி அழுதுகொண்டு அப்படியே திரும்பி நடக்க ஆரம்பித்தார்.

முத்தையா! முத்தையா!! என்று அங்கு நின்ற எல்லோரும் ஏக காலத்தில் கூப்பிட்டும் திரும்பிப் பாராமலே நடந்தார்.

'இனி எனக்கு யார் இந்த ஊரில் இருக்கிறார்கள்? அண்ணா, தந்தை - தாய் போன்ற ஆசிரியர் போய்விட்டார். இந்த அநாதைக்கு இனி என்ன வேலை இங்கே? என் சங்கீத தெய்வத்தை என் மனக் கோயிலிலேயே பிரதிஷ்டித்து இனி எப்போதும் உபாசிப்பேன்' என்று மெல்லக் கூறிக்கொண்டே நேராகத் தஞ்சாவூர் வந்து ரயிலேறித் தம் ஊரான ஹரிகேசநல்லூர் வந்து சேர்ந்து விட்டார்.

இவ்வாறு அவ்வூருக்கு முத்தையர் வேதாத்யயனத்தை எண்ணிப் புறப்பட்டு, அதில் ஓரளவு வெற்றிபெற்றுப் பின் சங்கீத சாஸ்திரக் கடலிலே நீந்தி, பல வித்வான்களோடு பழகி,

சங்கீத ஞானமாகிய ஒப்பற்ற பொருளைச் சம்பாதித்துக்கொண்டு மீண்டும், தம்மூருக்கு வந்துசேர்ந்தார்.

அவரைக் கண்ட உறவினர்கள் எல்லையிலா மகிழ்ச்சி கொண்டு அவர் பெற்றுவந்துள்ள சாஸ்திர ஞானத்தைக் காதாரப் பருகிப் பேரின்ப மெய்தினர்.

---

## 16. அசுர சாதகம்

பிறகு கொஞ்ச நாட்களில் தமது மாமாவின் மகளாகிய சிவகாமி என்ற பெண்மணியை மணந்து இல்லற தருமத்தில் ஈடுபட்டனர். அதனால் நான்கு வருஷகாலம் எங்கும் செல்லாமல் முத்தையர் அசுர சாதகம் செய்தார்.

தினந்தோறும் வைகறைப்பொழுதில் நாலு மணிக்கு எழுந்திருந்து முகம் கழுவிப் பல் விளக்கி விபூதியைத் தரித்துக் கொள்வார். பின் கையில் தம்பூராவை எடுத்துக் கொண்டு அக்கிரகாரத்தின் வடக்கோரத்திலுள்ள பஜனை மடத்துத் திண்ணையில் உட்கார்ந்து கடவுளுக்கு எதிரே தம்பூராவை மீட்டுவார். பின் இறைவனை வணங்கிச் சுருதியோடு சாதகம் செய்ய ஆரம்பிப்பார். ஸ்வராவளி, ஜண்டை வரிசை, கீதம், வர்ணம், ராக ஆலாபனை கீர்த்தனை என்ற முறை சிறிதும் பிசகாதபடி ஒழுங்காகச் சாதகம் செய்வார். அவ்விதம் பாடுவதில் சிறிதும் சோம்பல் கொள்வதில்லை. அவ்வூரில் உள்ள ஜனங்கள் முத்தையர் சாதகம் செய்கின்ற காலத்திலே அவர் பாடுவதைக் கேட்டே

பொழுதை அறிவர். 'முத்தையா சாதகம் பண்ண ஆரம்பித்து விட்டானு? என்று கூறிக் கொண்டே வைதீக சிரேஷ்டர்கள் ஆற்றுக்கு நீராடப் புறப் படுவர். கொஞ்சம் சங்கீதத்தில் ருசியுள்ள பெரியோர் கள் படுக்கையிலிருந்து எழுந்துவந்து அவரவர் வீட்டுத் திண்ணையில் அமர்ந்து முத்தையருடைய பாட்டைக் கேட்பர்.

இவ்விதமாக முத்தையர் அவ்வூர் முழுவதும் வைகறைப் பொழுதில் தம் பாட்டு எதிரொலிக்கும் படி சாதகம் செய்து பாடும் திறமையை விருத்தி செய்துகொண்டார். இந்தச் சாதகமே அவர் பிற் காலத்தில் சங்கீத வானிலே ஒளி மழுங்காச் சுடராக என்றும் விளங்க உதவி செய்தது.

---

## 17. புகழ் உதயம்

நான்கு வருஷ காலமாக இடைவிடாது உழைத்த பிறகு தமக்குள் அடங்கிக் கிடந்த இன் னிசையை எங்கும் பரப்ப ஆரம்பித்தார். ஆங் காங்கு கல்யாணங்களில் அதிகோலாகலமாகப் பாடு வார். செல்வத்திலும், அறிவிலும் சிறந்த ஜமீன் தார்களைப் பாடி மகிழ்வித்து விசேஷ கௌரவமும், மரியாதையும் பெறுவார். அவருடைய பேரும் புகழும் இசையின் பெருமையும் நாடெங்கும் பரவ லாயின.

சங்கீதத்தைப் பற்றிப் பேசப்படும் இடங் களிலே முத்தையரது பெயர்தான் நிற்கும் என்ருல் அவரடைந்த பெருமையை எடுத்துக் கூற வேண்டுமோ?

## 18. கானக் கலை மன்னர்

இந்திய நாட்டில் தலை சிறந்து விளங்கும் சமஸ்தானங்களில் ஒன்றான திருவாங்கூரின் அரசருக்கும் முத்தையருடைய புகழ் எட்டிற்று. புகழைக் கேட்ட அவரது காதுகள் முத்தையர் கானத்தை என்று கேட்பது என ஏங்கிக் கிடந்தன. அரசர் ஆசை வைத்த பொருள் அரைக்ஷணமும் தாமதிக்க முடியுமா? உடனேயே தக்க கனவான்களை அனுப்பி முத்தையரை அழைத்துவரச் செய்து சமஸ்தான வித்துவானாக செய்தார்.

அக்காலத்தில் அந்தச் சமஸ்தானத்தில் கல்யாண கிருஷ்ண பாகவதர், ராமசந்திர பாகவதர் முதலிய சங்கீத சிங்கங்கள் விளங்கிக் கொண்டிருந்தன. அவர்கள் முன்னிலையில் பாடிப் பெருமை பெறுவது என்பது மிகவும் அரிய செயல்தான். முத்தையர் கொஞ்சமும் தளராது ஊக்கமாகப் பாடி அவர்களாலும் கௌரவத்தையும் நன்மதிப்பையும் பெற்றார்.

விலை மதிக்க முடியாத இரத்தினமாக இருந்த போதிலும் அது தக்க இடத்திற்போய் சேராவிடில் சிறிதளவு தன் ஒளி குன்றியே இருக்குமல்லவா? தக்க காலம் வர அந்த மணி தனக்கேற்ற இடமான பொன்னிற் பதிக்கப் பெறுமானால் எவ்வளவு பிரகாசத்தை அடையும்? அத்தகைய மணிபோல் விளங்கினார் முத்தையர்.

சமஸ்தான வித்துவான் ஆன நாள்முதல் அவரது இசையும் புகழும் பன்மடங்கு வளர்ந்தன. மலையோங்கிய நாட்டின் அரசர் சபையிலே சங்கீதக் கலையோங்கிய மன்னராக விளங்கினார் முத்தையர்.

# 19. விதியா? சதியா?

பாக்கியமாகிய சக்கரம் எப்போதும் சுழலும் தன்மை உடையதாதலின் அறிந்தோ அறியாமலோ நற்பாக்கியமும் துர்ப்பாக்கியமும் மாறிமாறி வந்துகொண்டே யிருக்கும் என்பது உலகமறிந்த இரகசியம். முத்தையருடைய நற்பாக்கியத்திலும் அப்போது அப்போது சிற்சில தடங்கல்கள் ஏற்பட்டுக்கொண்டே இருந்தன. அவை விதியின் வேலையாகவும் இருககலாம்; அல்லது சாதாரண மனிதனுடைய மதியின் வேலையாகவும் இருக்கலாம். யாருடையதாக இருந்தால் என்ன? அதனுல் விளைவது துன்பம். அத்துன்பத்தை அனுபவிக்க வேண்டியது தானே அதிர்ஷ்டக்காரனுக்கும் உரியது!

முத்தையா பாகவதருக்கும் எதிர்பாராதபடி பல இடைஞ்சல்கள் ஏற்பட்டுக்கொண்டே இருந்தன. அவ்விதம் நேர்ந்தமை விதியினுலோ அல்லது சதியினுலோ என்பது ஆண்டவனுக்கே தெரியும். அக்காலத்தில் அவருக்குத் திடீரென உடலில் வியாதி தோன்றும். அது வந்ததுபோலவே திடீரென மறைந்துவிடும். சில சமயங்களில் ஆனந்தக் கடல் பொங்கும்படி அரசர் முன்னிலையில் சங்கீத வினிகை நடந்துகொண்டிருக்கும். அப்பொழுது எதிர்பாராத விதமாக வாயைத் திறந்து பாட இயலாதபடி ஆகிவிடும், அல்லது பாட்டு திக்க ஆரம்பிக்கும். இவ்விதமான சங்கடங்கள் இடைவிடாதபடி ஏற்பட ஆரம்பித்தன. அதனுல் முத்தையர் மனமுடைந்து தம்மைத்தாமே நொந்து

கொண்டு சமஸ்தானத்திலிருந்து திரும்பி ஹரிகேசநல்லூர் வந்துவிட்டார். தம்மூர் வந்ததும் கொஞ்ச நாட்களில் அவர் உடலும், பாடலும் மீண்டும் நல்ல நிலையை அடைய ஆரம்பித்தன.

---

## 20. குன்றில் விளக்கு

உடல் நல்ல நிலையை அடைந்தவுடனேயே முத்தையர் தம் ஊரைவிட்டுப் புறப்பட்டுத் தஞ்சாவூருக்குச் சென்றார். அச்சமயம் அவருடைய மாமாவான ஸ்ரீ லக்ஷ்மணஸூரி அவர்கள் தஞ்சையில் வாசம் செய்துகொண்டிருந்தார்கள். முத்தையரைச் சிறு பிராயத்திலிருந்தே போற்றி வளர்த்த பெரியார் அவரல்லவா! முத்தையருக்கு அவர்பால் உள்ள அன்பும் விசுவாசமும் என்றாவது அகன்று போக முடியுமா? ஆதலின் அந்தப் பொன் போன்ற மாதுலருடன் சேர்ந்து வசிப்பதே அவருக்கு அளவற்ற இன்பத்தை அளித்தது. அக்காலத்தில் வடமொழியின் எல்லைகண்ட அந்தப் பெரியாரிடமிருந்து பல புதிய அரிய விஷயங்களையும் அறிந்துகொண்டார். இவ்வாறு ஐந்து வருஷகாலம் (1902—1907) தஞ்சையில் வாசம் செய்தார். அப்போது சரஸ்வதி மஹால் வாசகசாலையிலுள்ள சிறந்த நூல்களையெல்லாம் கற்றுத் தேர்ந்தார். ஆபிரகாம் பண்டிதர் செய்த சங்கீத ஆராய்ச்சிக்கு விசேஷ உதவிகள் செய்தார். கோனேரிராஜபுரம் வைத்தியநாதையர் போன்ற அறிஞர்களின் நட்பைப் பெற்று இன்புற்றார்.

கல்லிடைக்குரிச்சி வேதாந்த பாகவதர் அந் நாளில் கதா பிரவசனம் செய்வதில் விசேஷத் திறமை பெற்று விளங்கினர். தஞ்சாவூர் பிரமுகர் கள் வேண்டுகோளுக்கிணங்கி அவர் அடிக்கடி அங்கு வந்து அழகாகக் கதை செய்வார். அச்சம யத்தில் முத்தையர் அவர் கதைகளைக் கேட்டுத் தாமும் அவ்வாறு செய்யவேண்டுமென்று மிகவும் ஆர்வம் கொண்டார். இந்த ஆர்வத்தை ஒருநாள் தம் மாதுலரிடம் கூற அவரும் அதற்கு ஆதர வளித்து கதா காலக்ஷேபத்திற்கேற்ற வடமொழி சுலோகங்களையும், பாடல்களையும் புதிய முறை யில் இயற்றிக் கொடுத்தார். இவற்றைக் கொண்டு கதா காலக்ஷேபம் செய்வதிலும் பிற்காலத்தில் நிக ரற்று விளங்கினர் முத்தையர். ஜனங்கள் இவ ரது சங்கீத வினிகையினும் கதா காலக்ஷேபத் தையே பெரிதும் விரும்பினராதலின் அதனையே அதிகமாகச் செய்ய ஆரம்பித்தார். அன்றிலிருந்து கதா காலக்ஷேபக் கலையிலும் தலை சிறந்தவராக விளங்கினர்.

பின் 1907-ம் ஆண்டின் பிற்பகுதியில் தஞ்சை யிலிருந்து சென்னை வந்து சேர்ந்தார். அப்போது சென்னைக்கு வந்திருந்த மகாராஷ்டிர சங்கீத வித்துவான் ஸ்ரீ பட்ஜியிடம் மகாராஷ்டிர பாணிகள் பல கற்றுக்கொண்டார்.

சென்னையில் வந்து தங்கிய நாள் முதல் முத் தையரது புகழ் மிகவும் உன்னத நிலையை அடைந் தது. அவரது பாடலைக் கேளாத சென்னைவாசிகள் இல்லை. அவர் கதா காலக்ஷேபத்தைக் கேட்டு உரு

காத உத்தமர்கள் இல்லை. கல்யாண வீடுகளிலும், பிரசித்தி வாய்ந்த சபைகளிலும் முத்தையருடைய வினிகையோ, காலக்ஷேபமோ இல்லையெனில் அது சற்றுக் குறையுள்ளதாகவே கருதப்பட்டது. இவ்விதமாக முத்தையர் சென்னையிலே இருந்து கொண்டு குன்றில் திகழும் விளக்கென நாடெங்கும் புகழால் ஒளிவீசி மேன்மை பெற்று வாழ்ந்தார். பல பெரியோர்களும், அறிஞர்களும், ஜமீன்தார்களும், செல்வவான்களும் முத்தையருடைய தோழராக விளங்கினர். அவர்களுள் ஆண்டிப்பட்டி ஜமீன்தாராகிய ஸ்ரீ பெத்தாச்சி செட்டியார் மிகவும் குறிப்பிடத் தக்கவர்.

அந்தக் காலத்தில் பல புதிய கீர்த்தனைகளையும் தில்லானுக்களையும் எழுதினர். அவை தமிழ் நாடெங்கும் பரவி அவரது பெருமையை எல்லோருக்கும் மேலும் அதிகமாக எடுத்துக் காட்டின.

---

## 21. சங்கீத கலாசாலை

சங்கீதத்தை அனுபவிப்பவரும் கற்பவரும் பலரிருந்தும் முறையாகப் போதித்துப் பாடகர்களை விருத்தி செய்யத் தக்க கலாசாலையொன்றை நிறுவி உதவி செய்பவர் அப்போது ஒருவருமில்லை. பலர் இக் குறையைப்பற்றிப் பேசினுர்கள். ஆனுல் ஒருவராவது அதைப் போக்குதற்குரிய முயற்சியில் ஈடுபடவில்லை. இக் குறையை நீக்க ஸ்ரீ முத்தையர் அவர்கள் மதுரையில் ஒரு சங்கீத கலாசாலையை ஆரம்பிப்பதெனத் தீர்மானித்து அதற்கு வேண்டிய

முயற்சிகளையெல்லாம் செய்தார். அதன் பயனாக 1924-இல் மதுரையில் ஒரு சங்கீத கலாசாலை ஸ்தாபிக்கப்பட்டது.

அக் கலாசாலையில் மிக்க ஊக்கம் நிறைந்த பல மாணவர்கள் சேர்ந்தனர். மதுரை ராஜம் பாகவதர் அவர்கள் சங்கீத போதகராக நியமிக்கப் பட்டார். ஸ்ரீமுத்தையா பாகவதர் கலாசாலைத் தலைவராக விளங்கினார். பல மாணவர்கள் நல்ல பயிற்சி பெற்றுத் தேர்ந்தனர். அவர்களுள் மிகவும் முக்கிய மானவர் இன்று கானகலாதரராக விளங்கும் ஸ்ரீமான் மணி ஐயர் ஆவர்.

மூன்று வருஷகாலம் அக்கலாசாலை மேன்மை யான முறையிலே நடைபெற்றது. பின்பு தக்க ஆதரவில்லாமையால் அக்கலாசாலையை மூடவேண் டியதாயிற்று.

தமிழ் நாட்டிலே சிறந்த தொண்டெனத் தொடங்கப் பெறும் எல்லா நற்காரியங்களுக்கும் இப்படிப்பட்ட இடையூறுகள் நிகழாமல் இருப்ப தில்லை என்பதை வாசகர் நன்கு அறிவர். ஸ்ரீபாகவதரவர்கள் ஆரம்பித்த கலாசாலையும் அந்த இடையூர்றுச் சுழலுள் அகப்பட்டு அமுங்கிவிட்ட தில் எவ்வித வியப்புமில்லை. அக்கலாசாலை ஆரம்ப நாள்முதல் பல பெரியோர்களின் ஆதரவு பெற்று வளர்ந்திருக்குமாயின், அது இன்று எத்தகைய மகோன்னத நிலையில் விளங்கிக் கொண்டிருக்கும்? அது எத்தனை சங்கீத வித்வான்களை இந்நாட்டிற்கு அளித்திருக்கும்? அதில் படித்துத் தேர்ந்த ஒவ் வொரு மாணவரும் ஒரு மதுரை மணி யாகவே

விளங்கமாட்டார்களா? அவ்வளவு நற்பாக்கியம் தமிழ் நாட்டிற்கு எளிதில் கிட்டாது என்பது நடை முறையிலிருந்து தெரிகிறது.

கலாசாலையை மூடவேண்டியதாயிற்றே என்று மனத் தளர்ச்சி சிறிதும் அடையாமல் முத்தையர் தம் சங்கீதப் பணியைச் செய்து கொண்டு வந்தார்.

1927-இல் ரங்கூனுக்கு வந்து தம்மைக் களிப் பிக்கும்படி அந்த நகரவாசிகள் முத்தையருக்குப் பல கடிதங்கள் எழுதினர். அதனால் அவர் அவ் வருஷ மார்ச்சு மாதத்தில் ரங்கூனுக்குச் சென்று அங்குத் தமது சங்கீத பாண்டித்தியத்தினையும், கதா காலக்ஷேப பாணியையும் நிலை நிறுத்திப் பல்லோரைப் பரவசப்படுத்திப் பின் அங்கிருந்து வட இந்தியாவெங்கும் சுற்றிப் பிரயாணம் செய்து தம் திறமையைக் காட்டிச் செப்டம்பர் மாதத்தில் சென்னை வந்து சேர்ந்தார்.

---

## 22. 'வள்ளி நாயகனே'

மைசூர் சமஸ்தானத்தின் பெருமையை அறி யாதவர் ஒருவரும் இரார். கலை, கல்வி, தொழில் முதலியவற்றை ஆதரிப்பதில் அக்காலத்தில் அச் சமஸ்தானத்துக்கு இணை அதுவேயன்றி வேறு இல்லை. ஒவ்வொரு விசேஷ நாளிலும் பல திறப்பட்ட சாஸ்திரங்களிலும் வல்லமை வாய்ந்த அறிஞரை அழைத்து அவர் திறமையைப் பாராட்டிப் பரிசு கொடுத்தனுப்புவது அச்சமஸ் தானத்தின் உரிமையாக இருந்தது. அதனால் பல

வித்துவான்கள் அங்குச் சென்று தம் திறமையைக் காட்டிப் பரிசு பெற்று வந்தனர். அரசர் எல்லா வித்வான்களையும் தாமே நேராகக் கவனித்து மரியாதை செய்வார்.

அக்காலத்தில் மதுரை ஸ்ரீ பொன்னுசாமி பிள்ளை நாதஸ்வர வாத்தியத்தில் தமிழ் நாட்டுச் சக்கரவர்த்தியாக விளங்கினர். அவரது பெயரை அக்காலத்து முதியோரும் இளைஞரும் நன்கு அறிவர். அவர் வருஷத்துக் கொருமுறை மைசூர் சென்று நாதஸ்வரம் வாசித்து அரசரை மகிழ் வித்துப் பரிசு பெற்று வருவார்.

ஒரு சமயம் அவர் அரசர் முன்னிலையில் இனிய கீர்த்தனைகளை நாதஸ்வரத்தில் வாசித்துக் கொண்டிருந்தார். சபையோர் யாவரும் மெய்ம் மறந்து அதில் ஈடுபட்டுத் தேனில் விழுந்த ஈயெனத் தத்தளித்துக் கொண்டிருந்தனர். சங்கீத ரஸிக சிகாமணியாகிய அரசரும் அவ்வாறே ஈடுபட்டு மெய்ம்மறந்து கேட்டுக் கொண்டிருந்தார்.

இவ்வாறு அரசருட்பட எல்லோரும் ஆனந்த வெள்ளத்தில் ஆழ்ந்திருப்பதைக் கண்ட நாதஸ்வர வித்வான் பன்மடங்கு ஊக்கத்துடன் வாசித்து நடுவில் ‘ ஷண்முகப்ரிய’ ராகத்தை ஆலாபனை செய்து ‘வள்ளி நாயகனே’ என்ற கீர்த்தனத்தை வாசித்து முடித்தார். எல்லோரும் இன்பத்தால் மனமுருகி நின்றனர்.

அப்போது அரசர் ஸ்ரீ பொன்னுசாமி பிள்ளையை அருகில் அழைத்து ‘இப்போது வாசித்த

கீர்த்தனையை இயற்றியவர் யார்? என்ன ராக சஞ்சாரம்! என்ன லயக்கட்டு! அதன் சாஹித்தியத்தையும் வாய்ப்பாட்டாகப் பாடிக் காட்டும், கேட்க மிகவும் ஆவலாயிருக்கிறேன்' என்று கூறினர். உடனே ஸ்ரீ பொன்னுசாமி பிள்ளை நாதஸ்வரத்தைக் கீழே வைத்து விட்டு, 'வள்ளி நாயகனே' என்ற கீர்த்தனத்தைப் பாடிக் காட்டி, "இதை இயற்றியவர் ஹரிகேச நல்லூர் முத்தையா பாகவதரவர்கள்; இன்னும் இது போன்ற பல கீர்த்தனைகளை அவர்கள் செய்திருக்கிறார்கள். சமூகம் விரும்பினல் இங்கே அவர்களை வரும்படி செய்கிறேன்" என்றார்.

"ஆம், அவசியம் அவரைப் பார்க்கவேண்டும். அவரியற்றிய கிருதிகளை அவரே பாடக் கேட்க வேண்டும். நான் அவரை அழைக்கும்படி செய்கிறேன். நீரும் போய்ச் சொல்லும்" என்றார். அரசர்.

இச் சம்பாஷணையோடு அன்று வினிகை முடிந்தது.

அந்நாள் முதல் அரசர் காதிலே அக்கீர்த்தனை ஒலித்துக்கொண்டே இருந்தது. சங்கீத வடிவமாகிய ஸ்ரீ முருகனையே பரவசப்படுத்தும் அக்கீர்த்தனை அரசனை வசியம் செய்ததில் வியப்புண்டோ?

சில நாட்கள் சென்றன. எத்தனையோ அரசாங்க வேலைகளில் ஈடுபட்டிருந்த அரசர் மனம் முத்தையருடைய கீர்த்தனையைப் பற்றிய சிந்தனைக்குச் சிறிது ஓய்வு கொடுத்தது. அதனல் அரசர் முத்தையர் விஷயத்தில் அதிக கவனம் செலுத்த

வில்லை. 'ஆகும் காலம் வந்தாலன்றி ஒரு காரியம் நிறை வேருது' என்பது ஆன்ருேர் வாக்கு. அதன்படி ஸ்ரீ முத்தையருக்கும் மைசூர் சமஸ்தானம் செல்லத்தக்க காலம் வரவில்லை. அரசருக்கும் அவர் பாடலை நேரிலே கேட்டு இன்புறும் காலம் வரவில்லை. இவ்வாறு சில நாட்கள் கடந்தன.

---

## 23. தெய்வீகத் தடை

மைசூரிலிருந்து சென்ற ஸ்ரீ பொன்னுசாமி பிள்ளை முத்தையரைச் சந்தித்துத் தாம் அரசர் முன் நாதஸ்வரம் வாசிக்கையில் நிகழ்ந்ததைத் தெளிவாகக் கூறி உடனே சென்று மைசூர் அரசரைப் பார்க்கும்படி ஊக்கப்படுத்தினர். இயல்பாகவே அவ்விடம் சென்று சம்மானம் பெறவேண்டும் என்று எண்ணியிருந்த முத்தையருக்கு இந்நிகழ்ச்சியைக் கேட்டவுடனே ஆர்வம் பன்மடங்காகப் பெருக, உடனே மைசூர் புறப்பட்டுச் சென்ருர். அப்போது மைசூரிலே நவராத்திரி உற்சவ காலம். அந்தச் சமயத்தில் மைசூருக்குப் பல திறப்பட்ட சங்கீத வித்துவான்களும் சென்று அரசரிடம் தம் திறமையைக் காட்டிப் பரிசு பெறுவர். சங்கீத வினிகைக்கேற்ற மண்டபத்தில் அரசர் ஒவ்வொரு வித்துவானுடைய திறமையையும் தாம் நேராக அறிந்த பிறகே ஸம்பாவனை கொடுக்கச் செய்வார். அதற்காக வித்துவான்கள் பாடும்போது தாமே வந்து வினிகை மண்டபத்துக்கு எதிரேயுள்ள அறையில் அமர்ந்து கேட்பார். சாதாரண வினிகையாக இருந்தால்

பத்து நிமிஷங்களும், உயர்ந்த வினிகையாக இருந்தால் ஒரு மணி நேரமும் இருந்து அனுபவிப்பார். மற்றுமொருமுறை கேட்க விருப்பமிருக்குமாயின் அப் பாடகரை மறுநாளும் வந்து பாடச்செய்து கேட்டு இன்புறுவர். பின்பு அவர்களுக்கேற்ற மரியாதையை அளிக்கச் செய்வார். இவ் விஷயத்தை எல்லாச் சங்கீத வித்துவான்களும் அறிவாராதலின் அவரவர்கள் தத்தம் முழுத்திறமையையும் காட்டிப் பாடுவார்கள். அவ்வாறு செய்து வெற்றி பெற்றுச் சிறந்த கௌரவத்தை அடைபவர் மிகச் சிலரே.

இவற்றையெல்லாம் முத்தையர் அங்கு வந்திருந்த பல வித்வான்களிடம் கேட்டுத் தெரிந்து கொண்டார். 'தாம் மிகவும் நன்ருகப் பாடி அரசரை மகிழ்விக்கவேண்டும்' என்ற எண்ணம் அவர் மனத்திற் பொங்கி நின்றது. குறிப்பிட்ட நேரத்தில் சங்கீத மண்டபத்திலிருந்த அதிகாரிகள் முத்தையரை அழைத்துப் பாடும்படி கூறினர். அப்போது மாலை நேரம். முத்தையரும் உடனே சென்று அரங்கத்தின்மேல் அமர்ந்தார். பக்க வாத்தியக்காரர்களும், சுருதி கூட்டித் தயாராயினர். முத்தையர் பாட ஆரம்பித்து இரண்டு கீர்த்தனைகளையும் முடித்தார். அரசரும் ரசித்துக் கேட்டார்.

ஆனல் அன்று முத்தையர் உள்ளம் என்றும் போல் உற்சாகமுற்று நிற்கவில்லை. அக் காரணத்தினல் அவருக்குப் பாடுவதில் ஊக்கம் செல்லவில்லை. அவரையறியாமலே ஒருவிதச் சோர்வு அவர் மனத்தைப் பிடித்துக் கொண்டிருந்தது.

'அரங்கத்தில் உட்கார்ந்து கொண்டிருக்கிறோமே, ஏதாவது பாடவேண்டுமே' என்ற எண்ணத்திலே பாடினாரேயன்றி உள்ளமுவந்து ஊக்கமிகுந்து அவர் பாடவில்லை. இவ்விதமாகவே வினிகை நடந்துகொண்டிருந்தது. அப்போது அரசர் வழக்கம்போல் வந்து தமக்கிடப்பட்டிருக்கும் ஆசனத்திலமர்ந்து கொஞ்ச நேரம் கேட்டார். பின் எழுந்து அவருக்குரிய சம்மானத்தைக் கொடுக்கும்படி அதிகாரியிடம் சொல்லிவிட்டு எழுந்து போய்விட்டார். அப்புறம் சிறிது நேரத்திலே வினிகை முடிவடைந்தது. முத்தையர் அங்குள்ளவர்களிடம் விடை பெற்றுக்கொண்டு தம் ஜாகையை நோக்கி மெல்ல நடந்தார்.

---

## 24. குற்றத்துக்கேற்ற தண்டனை

முத்தையருடைய கால்கள் நடந்தனவேயன்றி அவர் மனம் வினிகை நடந்த முறையையே எண்ணி நின்றது. 'ஏன் இன்று என்றுமில்லாத இந்த ஊக்கக் குறைவு. ஒரு நாளாவது என் மனம் இவ்வளவு சோர்ந்து நின்றதில்லையே; இதன் காரணமாக நம் வினிகையும், ஏனைய சாதாரண வித்துவான்களுடைய வினிகைபோல் ஆகிவிட்டதே; அரசரும் அவ்வாறே கருதிச் சிறிது நேரத்தில் எழுந்து சென்றுவிட்டாரே? எப்பொழுதுமுள்ள உற்சாகமும் ஊக்கமும் இன்று இருந்திருக்குமானால் என் வினிகை இப்படியா முடிந்திருக்கும்? எத்தனையோ பல்லாயிரம் பேரை இன்ப வெள்ளத்தில் ஆழ்ந்து

தத்தளிக்கும்படிச் செய்த சாரீரமா, இன்று அரச ரைச் சிறிது நேரத்திலே எழுந்து செல்லச் செய் தது! இல்லை, இதில் ஏதோ இருக்கவேண்டும். திரு வனந்தபுரத்தில் வாட்டிய விதி இங்கேயும் பின் தொடர்ந்து வந்து விட்டதா?' என்று பலவாறு எண்ணமிட்டுக்கொண்டே சென்று தம் ஜாகை யின் கூடத்திற்குள் வந்தார். அப்போதுதான் அவ ருக்குத் தாம் எங்கிருக்கிறோமென்ற நினைவு வந் தது. மெல்லத் தலை நிமிர்ந்து பார்த்தார். எதிரே ஸ்ரீ சாமுண்டீச்வரியின் உருவப்படம் காட்சியளித் துக் கொண்டிருந்தது. அதைப் பார்த்தவுடனே திடீரென்று எதையோ நினைத்துக்கொண்டு, 'தாயே' என்று கதறிக் கண்ணீர்விட்டு ஓடி அந்த அன்னையின் காலடியில் விழுந்து அழுதார்.

'தகும்! இந்த பாவிக்கு நீ விதித்த தண்டனை தகும்; இது போதுமா எனக்கு! இன்னும் எத்தனை வினிகைகளைப் பாழ்படுத்தி என்னை அவமானமடை யச் செய்தாலும் இன்று நான் செய்த பாவத்துக்கு விமோசனம் ஏற்படாது. உன்னை மறந்தேனே! பெற்ற தாயை மறந்த பிள்ளையானேனே! உன்னை நினையாது உன்னைத் துதியாது எந்த வினிகை இன்று வரை நான் செய்திருக்கிறேன்? இன்று அரசர் நம் பாட்டினைக் கேட்கப் போகிறார் என்ற ஆசை மேலீட்டாலல்லவா இக்காரியம் செய்தேன்! எனக்கு இன்று நீ கற்பித்த பாடம் மிகவும் நியாய மானது, மன்னித்துக்கொள்! நான் யார்? உன் குழந்தை தானே! என்மேல் இவ்வளவு கோபம் கொள்ளலாமா? பொறுத்துக்கொள். இந்த ஒரு

தடவை மன்னித்து அருள் செய்', என்று புலம்பிச் சிறு குழந்தைபோல் அழுதார். பின்பு, இதோ வந்தேன் உன் சந்நிதிக்கு' என்று கூறித் தம்பூராவை எடுத்துக்கொண்டு ஓடினர் - சாமுண்டீஸ்வரியின் ஆலயத்துக்கு.

இங்கு வாசகர்கள் அறிய வேண்டிய விஷயமொன்று உண்டு. முத்தையர் தம் ஆசிரியரான சாம்பசிவ ஐயரிடம் ஸ்ரீ வித்தியா மந்திர உபதேசம் பெற்றவர். எக்காரியத்தையும் - அதிலும் சங்கீத வினிகை - ஆரம்பிக்கும்போது ஸ்ரீ பரமேச்வரியை நினைத்துப் பிரார்த்தித்துக் கொள்ளாது தொடங்குவதில்லை. அன்று அரசர் முன்னல் பாடும்போது எக்காரணத்தினலோ அச் செயலை மறந்துவிட்டார். அதனலேயே அவ்விதத் தடங்கல் தமக்கு ஏற்பட்டது என்பது அவர் உறுதி. அதை எண்ணியே அவர் மேற்கூறியபடி கதறினர். தெய்வத்தை மறந்து தொடங்கும் காரியம் பலனை எய்தாமலேயே நின்றுவிடும் என்ற பெரியோர் கொள்கைக்கு அன்றைய நிகழ்ச்சி ஒரு எடுத்துக் காட்டாக நின்றது.

---

## 25. அன்னையின் அருள்

தம்பூராவும் கையுமாக ததும்பிய கண்ணீரும் முகமுமாக ஆலயம் நோக்கிச் சென்ற முத்தையர் ஈச்வரியின் சந்நிதியில் ஒரு புறமாக அமர்ந்து மனமுருகி 'தப்புலன்னியு' என்ற பௌளி ராகக் கீர்த்தனத்தைப் பாட ஆரம்பித்தார். உள்ளத்தின் அடியிலிருந்து கருணை ததும்பக் கனிந்து வரும் பாடல்

எவ்வளவு உயர்ந்த நிலையிலே விளங்கும்! ஆங் காங்கு ஆலயத்தில் சென்றுகொண்டிருந்த ஜனங் கள் அவர் பாட்டைக் கேட்டு மெய்ம்மறந்து திறந்த வாய் மூடாமல் கொடுத்த காதுகளை வாங்காமல் சிலைபோல் நின்று கேட்டுக்கொண்டிருந்தனர். எல் லோருடைய காதிலும் இதயத்திலும் முத்தைய ருடைய கீதம் தம்பூரா தொனியுடன் ரீங்காரம் செய்துகொண்டிருந்தது. இக் காட்சி கண்ணன் குழலூதிய காலத்தில் ஆயர்களும், கோபியர்களும், பசுக்களும் அந்தக் குழலோசையின் வழிப்பட்டு இன்ப மிகுதியால் சித்திரம்போல் சோர்ந்து நின் றனர்' என்ற கவிகளின் மொழியை உண்மைப் படுத்திக் காட்டியது.

இந்நிலையில் வழக்கம்போல் அரசர் சாமுண் டீச்வரியைத் தரிசிக்க வந்தார். எப்பொழுதும் அரசர் வந்த காலத்தில் ஆங்காங்கிருக்கும் ஜனங் கள் ஒதுங்கி வணங்கி நிற்பார்கள். அன்று மூத் தையர் கீதத்தில் மனத்தையும், அறிவையும் ஈடு படுத்தியிருந்த அவர்கள் அரசர் வந்ததைக் கவனிக்க வில்லை. அரசர் மெல்லத் தம் வாகனத்திலிருந்து இறங்கி, கோயிலுள்ளே நுழைந்தார். அப்போது முத்தையருடைய தம்பூராவின் நாதம் அவருக்கு நல்வரவு கூறி அழைத்தது. அதனோடு முத்தைய ருடைய பாடல் அவருடைய ஹிருதயத்தைக் கட்டிப் பிடித்து இழுத்து வந்து அவருடைய அருகில் நிறுத் தியது.

முத்தையர் ஒன்றையும் கவனிக்கவில்லை. அன்னையான ஈச்வரியின் அருளை எதிர் நோக்கி

அகமுருகி, அன்பு ததும்ப மெய்ம்மறந்து பாடும் போது, அரசரையா அவருடைய கண்கள் காணும்? அவர் பாட்டு இடைவிடாது தேனெழுக்குப் போல் பெருகிக் கொண்டிருந்தது. அரசர் கொஞ்ச நேரம் நின்று கேட்டார், 'ஆகா! இது சாதாரண மானிடர் கானந்தானு? நேற்று இவ்விதம் இவர் பாடவில்லையே! இவரை நாளை மறுபடியும் அழைத்துப் பல நாட்கள் நம்மோடு இருக்கச் செய்து, பாடலைக் கேட்க வேண்டும்' என்று மனத்தில் தீர்மானித்துக் கொண்டு மெல்லப் போய்விட்டார்.

பாட்டு முடிந்தது. முத்தையர் தேவியின் பாதத்தில் விழுந்து வணங்கித் தம் பிழையைப் பொறுத்துக் கொள்ளும்படி பலமுறை பிரார்த்தித்துக் கொண்டு வீடு திரும்பினர். அப்போது அவரை அம்பிகையின் அருளும் அரசரது ஆதரவும் வந்தடைந்தன என்பதை அங்கிருந்தவருள் ஒருவரும் அறியமாட்டார். முத்தையருக்கும் தெரியாது. அங்கிருந்தவர்களெல்லோரும் வைத்தவிழி வாங்காமல் முத்தையரைப் பார்த்துக் கொண்டே நின்றனர். அவர் ஒருவரையும் கவனியாமல் தம்பூராவைக் கையில் எடுத்துக் கொண்டு நேரே ஜாகைக்கு வந்து சேர்ந்தார்.

---

## 26. காயக சிகாமணி

மறுநாள் காலையில் அரண்மனை அதிகாரியொருவர் தக்க வாகனத்தோடு முத்தையரை வந்து பார்த்து வணங்கி, "உடனே உங்களை அழைத்து

வரும்படி அரசர் ஆக்ஞை. வந்தருள வேண்டும்" என்று வேண்டிக் கொண்டார். முத்தையருக்கு ஒன்றும் விளங்கவில்லை. "என்ன! என்னையா அரசர் அழைத்து வரச் சொன்னார். தவறி என்னிடம் வந்திருக்கிறீர்கள், என்று நினைக்கிறேன்" என்றார் முத்தையர்.

உடனே அதிகாரி முன் நாள் ஆலயத்தில் நிகழ்ந்தவற்றை யெல்லாம் எடுத்துக் கூறினார். அதைக் கேட்ட முத்தையர் ஆனந்தத்தால் பொங்கி "ஆகாகா! அன்னையின் அருளை என்னவென்று புகழ்வது! இக்கலியுகத்திலும் கண்கூடாகப் பலனை அளிக்கின்றாரே! தாயே! என்ன அருள், என்ன அருள்' என்று சாமுண்டீச்வரியின் அனுக்கிரஹத்தைப் புகழ்ந்துகொண்டு அதிகாரியுடன் சென்றார்.

முத்தையர் முதல் நாள் பாடின சங்கீத மண்டபத்துக்கே அழைத்துச் செல்லப்பட்டார். அங்கு வினிகைக் கேற்றபடி அரங்கம் அலங்கரிக்கப் பட்டிருந்தது. பக்கவாத்தியக்காரர்கள் அமர்ந்திருந்தனர். முத்தையர் தம்முடன் வந்த அதிகாரியின் சொற்படி அரங்கத்தில் அமர்ந்து வினிகை செய்ய ஆரம்பித்தார். அப்போது அரசர் வந்து ஆசனத்தில் அமர்ந்து ஒருமணி நேரம் முத்தையர் பாடலைக் கேட்டு ரஸித்துப் பாராட்டினார். பின்பு மறுநாளும் வந்து இவ்விதமே வினிகை செய்ய வேண்டும் என்று அரசர் வேண்டிக் கொண்டார். அதனை எதிர்பார்த்த முத்தையரும் மட்டற்ற மகிழ்ச்சி கொண்டு அவ்விதமே செய்தார். இவ்வாறு ஐந்து

நாட்கள் முத்தையரைப் பாடச்செய்து அரசர் மிக வும் ரஸித்து இன்புற்ருர்.

ஆரும் நாள் அரசர் தலைமையில் பெரிய அறி ஞர் சபை யொன்று கூடியிருந்தது. அன்று எல் லோரும் முத்தையர் வருகையை எதிர்பார்த்துக் கொண்டிருந்தனர். முத்தையர் சபையில் நுழைந் ததும் எல்லோரும் கரகோஷம் செய்து வரவேற் றனர்.

முத்தையர் நேராகச் சென்று அரசரையும் சபையோரையும் வணங்கி வினிகை செய்வதற்கென அமைக்கப்பட்டிருந்த மேடைமீது அமர்ந்தார். வாத்தியக்காரர்கள் வழக்கம் போல் முன்னமேயே வந்து காத்திருந்தனர்.

அரசர் அனுமதியோடு வினிகை ஆரம்பமா யிற்று. சொல்ல வேண்டுமா அன்றைய வினிகை யைப் பற்றி! பராசக்தியின் அருளும் அரசரின் அன்பும், ஆதரவும் சேர்ந்து கொண்ட காரணத் தால் மிகவும் முதல் தர வினிகையாக நடந் தேறியது. பிறகு அறிஞர் பலர் அன்றைய வினி கையைப் பற்றிப் புகழ்ந்து பேசினர். முடிவில் அரசரும் முத்தையரைப் பாராட்டி 'காயகசிகா மணி' என்ற பட்டத்தை அளித்தார்.

அதுவரை இத்தகைய பட்டம் ஒருவருக்கும் அச்சமஸ்தானத்தில் கொடுக்கப்படவில்லை. முத்தை யரே முதன் முதலில் அதைப் பெற்ருர். அதனுல் அது அவருக்கு விசேஷ கௌரவத்தை அளித்தது. அன்று முதல் காயகசிகாமணி முத்தையர், மைசூர்

சாம்ராஜ்ய சங்கீத சிகாமணியாகவும், அரசரின் மித்திர மணியாகவும் விளங்கினர்.

பின் சில நாள் அரசரோடு தங்கித் திரும்பச் சென்னை வந்து சேர்ந்தார்.

---

## 27· கலைக்குச் செய்த தொண்டு

தமிழ் நாட்டில் இனிய கலைகளின் மேம்பாட்டிற்குப் பாடுபடும் கழகங்களுள் சென்னை சங்கீத கலைக்கழகம் (மியூசிக் அகாடமி) தலை சிறந்தது. அது 1928-ஆம் வருஷம் ஸ்தாபிக்கப்பட்டது. அன்று முதல் அக்கழகம் சங்கீத வளர்ச்சிக்காக இடைவிடா து பாடுபட்டு வருவதை சங்கீத நிபுணர்களும் ஏனைய பெரியோர்களும் நன்கு அறிவர். 1929-இலிருந்து அது அடைந்த முன்னேற்றத்துக்கு ஸ்ரீ முத்தையா பாகவதரே காரணமாவர்.

அகாடமி செய்யும் தொண்டுகளில் முத்தையர் 1929-இலிருந்து பெரும்பங்கு எடுத்துக் கொண்டார். அவர்கள் ஊக்கத்தைக் கண்ட அகாடமியார் அவரை 1930-இல் தலைவராகத் தேர்ந்தெடுத்தனர். பின் இரண்டு வருஷகாலம் அகாடமி சங்கீத கலா சாலைத் தலைவராகவும் விளங்கினர். பின்பு அப்பதவிகளை விட்டு விலகியிருந்தாலும் அகாடமிக்குச் செய்யத் தக்க தொண்டுகளை மிகவும் சிறந்த முறையிலே நிறைவேற்றினர். முத்தையர் கலந்து கொள்ளாத சங்கீத மகாநாடு அந்தப் பன்னிரண்டு வருஷ காலத்தில் நடைபெற்றதே இல்லை.

சங்கீத மகாநாடு நடைபெறும்போது ராகசம் பந்தமான சர்ச்சைகளில் முத்தையர் மிகவும் ஈடு படுவார். எல்லோரும் மிகவும் எளிதில் புரிந்து கொள்ளும்படி தம் அபிப்ராயத்தைத் தெளிவாக எடுத்துக் கூறுவார். சாஸ்திர ஆதாரங்களைக் காட் டுவார். எல்லாவற்றுக்கும் மேலாகச் சிறிதும் தவ றுதபடி பாடி ஸ்வரஸ்தானங்களையும், லக்ஷணத் தையும் ஆங்காங்கு அலசிக் காட்டும்போது அவர் பாடும் ராகம் தனக்குரிய வடிவத்தோடு ஒவ்வொரு வர் முன்னுலும் வந்து நிற்பது போலிருக்கும்.

முத்தையர் ஆராய்ந்து ராகசர்ச்சை செய்த காலத்திலே எத்தனையோ புதிய ராகங்கள் வெளிப் பட்டன. பெயரளவிலே தெரிந்திருந்த எத்த னையோ ராகங்கள் தமக்குரிய லக்ஷணத்தை முறையே எடுத்துக் காட்டிக்கொண்டு நின்றன. எல்லோரும் அறிந்த எத்தனையோ ராகங்கள் மெரு கிடப்பட்டு முன்னிலும் பன்மடங்கு ஒளிபெற்றன. ஸாஹித்ய அளவிலே தெரிந்திருந்த எத்தனையோ கீர்த்தனைகள் பாடும் பாணியை யடைந்தன. யார்க் கும் செய்யவரிய இச் செயல்களை யெல்லாம் பாராட்டி மியூசிக் அகாடமியார் 1942-இல் ஸ்ரீ முத் தையருக்கு 'சங்கீத கலாநிதி' என்ற பட்டம் கொடுத் துக் கௌரவித்துத் தம் நன்றியறிவைத் தெரிவித் துக் கொண்டனர்.

முத்தையருடைய அருஞ்சேவையைப் பெறும் பாக்கியம் தமிழ்நாடு மாத்திரம் பெறவில்லை. திருவாங்கூர் சமஸ்தானமும் அத்தகைய பேற்றுக் குப் பாத்திரமாகி நின்றது. முத்தையரை ஆதரிப்

பதில் அந்தச் சமஸ்தானத்தார் மைசூருக்குச் சற்றும் இளைக்கவில்லை. அவர்கள் காயகசிகாமணி முத்தையருக்குப் புதிதாக 'டாக்டர்' என்ற பட்டத்தைக் கொடுத்துத் தம் கடமையை நிறைவேற்றிக் கொண்டனர். மூன்று வருஷ காலம் ஸ்வாதித் திருநாள் சங்கீத கலாசாலைப் பிரின்ஸிபாலாகவும் முத்தையரை வேலை பார்க்கச்செய்து அவர் சேவைகளைப் பெற்றுப் பயனடைந்தார்கள். அக்காலத்திலேதான் ஏட்டினளவிலேயிருந்த அரசர் ஸ்வாதித் திருநாளுடைய கீர்த்தனைகள் தம் இடத்தைவிட்டுப் புறப்பட்டு நாடெங்கும் பரவிப் புகழைப் பெற்றன. அதற்கு முத்தையர் ஆதிகாரணமாக விளங்கினார் என்று சொல்ல வேண்டியதில்லை.

இவ்வாறு கர்நாடகம், தமிழ் நாடு, கேரளம் ஆகிய மூன்று பிரதேசங்களும் முத்தையரைக் கௌரவிக்கும் பாக்கியத்தைப் பெற்றன. இந்தியா முழுவதும் அவரது பாடலைக் கேட்டு இன்ப வெள்ளத்தில் ஆழுந் தன்மையைப் பெற்றது.

---

## 28. இறுதிப் பிரசங்கம்

1944-ஆம் வருஷம் டிசம்பர் மாதத்தில் வழக்கம் போல் மியூசிக் அகாடமியார் சங்கீத மகாநாட்டை மிகவும் விமரிசையாகக் கொண்டாடினர்.

ஒவ்வொரு வருஷ விழாவிலும் அகாடமியார் சிறந்த சங்கீத அறிஞர்களுக்குப் பட்டம் கொடுத்து மரியாதை செய்து, கௌரவித்து வருவதை அனே

வரும் அறிவர். அவ்வருஷம் அவர்கள் ஸ்ரீமான் T. L. வேங்கடராமையருக்குச் 'சங்கீத கலாநிதி' என்ற பட்டம் வழங்கினர்கள்.

ஸ்ரீ வேங்கடராமையர், வடமொழிக் கவிவாணராகிய ஸ்ரீ லக்ஷ்மணஸூரி யவர்களின் அருமைப் புதல்வர்; தந்தையைப் போலவே வடமொழியில் விசேஷப் பயிற்சியுள்ளவர்; சிறந்த அறிஞர்; சென்னை நகரத்திலுள்ள பிரபல நியாயவாதிகளுள் ஒருவர்; சங்கீதக் கலையபிவிருத்தியின் பொருட்டு அகாடமியின் மூலம் பல வருஷங்களாகப் பாடுபட்டு வருபவர்; எல்லாவற்றுக்கும் மேலாகச் சங்கீதத்திலே சிறந்த அனுபவமும், பாடும் திறமையும், சாஸ்திர ஞானமும் பெற்று விளங்குபவர். இத் தன்மைகளை யெல்லாம் மனத்திற்கொண்டு அகாடமியார் மேற்சொன்ன பட்டத்தை அவருக்கு வழங்கினர்கள். அந்த மகிழ்ச்சி விழாவில் ஸ்ரீ முத்தையா பாகவதர் மிகவும் உள்ளக் களிப் போடு கலந்துகொண்டார். தமக்குத் தந்தைபோல விளங்கி வந்த அம்மானகிய ஸ்ரீ லக்ஷ்மணஸூரி யவர்களின் அருமைப் புதல்வரை, அத்தகைய பட்டத்தை வகிக்கத்தக்க பெருமை வாய்ந்த தம் அம்மான்சேயை அகாடமியார் கௌரவிக்கிறார்கள் என்பதை மனத்துட்கொண்ட முத்தையர் எல்லையில்லா மகிழ்ச்சியில் ஆழ்ந்தார். அப்போது பல அறிஞர்கள் வேங்கடராமையரைப் பற்றியும், பின் சங்கீத சாஸ்திரத்தைப் பற்றியும் பேசினர். அவர்களுள் முத்தையர் செய்த பிரசங்கம் எல்லோருடைய மனதையும் அதிகமாகக் கவர்ந்தது.

அந்தப் பிரசங்கத்தில், சங்கீத ஸ்வரங்களைப் பற்றியும், அவற்றின் கிருஹபேதங்களைப் பற்றியும் அவர் பேசிப் பாடிக் காட்டியது எல்லோருக்கும் அளவிலா வியப்பையும், ஆனந்தத்தையும் உண்டாக்கியது. அதுவரை அகாடமியில் கிருஹபேதத்தைப் பற்றி ஒருவரும் பேசியதே யில்லை. சங்கீத சாஸ்திரத்திலே ஒருவராலும் லகுவில் அறிய முடியாத அவ்விஷயத்தை மிகவும் எளிதாக எடுத்துப் பேசிய அவர் திறமையைப் பாராட்டாதவர் அன்று அச்சபையில் ஒருவரும் இல்லை.

சங்கீதத்தைப் பற்றிய அந்தப் பிரசங்கமே முத்தையருடைய கடைசிப் பிரசங்கம் என்பதை அன்று ஒருவரும் உணரவில்லை. அந்நிகழ்ச்சிக்குப் பிறகு சென்னையை விட்டு மைசூருக்குப் போனவர் திரும்பிச் சென்னைக்கு வரவில்லை.

---

## 29. இறுதிக் காலம்

முத்தையர் மைசூர் சென்று மூன்று மாத காலம் சுகமாக வாழ்ந்தார். மைசூர் அரசருக்கு சங்கீதத்திலே குருவாக விளங்கினார். அதனால் அவருக்கு முன்னிலும் பன்மடங்காக மரியாதைகள் நடந்தன. முத்தையர் எல்லாவித இன்பங்களையும் அனுபவித்துக்கொண்டு இறைவன் திருவருளை வியந்து வாழ்ந்து வந்தார்.

காலத்தின் சூழ்ச்சியால் 'புளூரஸி' என்னும் கொடிய நோய் அவருடலிலே புகுந்தது. அது

இரண்டு மாத காலம் அவரை வாட்டி வருத்தியது. அக்காலத்தில் அது அவரை இறைவனடியிற் சேர்ப்பதற்குரிய முயற்சிகளைச் செய்ததை ஒருவரும் அறியவில்லை. 1945-ஆம் வருஷம் ஜூன் மாதம் 30-ஆம் தேதி திடீரென்று அவர் இறைவன் திருவடி நிழலை அடைந்தார்.

நாடு முழுவதும் இச்செய்தியைக் கேட்டுத் திடுக்கிட்டுத் துன்ப வெள்ளத்துள் ஆழ்ந்தது. மைசூர் அரசருக்கும், சங்கீத கலா ரசிகர்களுக்கும், முத்தையருடைய உறவினர்க்கும் உண்டான துக்கத்தை அளவிட்டுக் கூறமுடியாது. 'உலகத்தில் யார்தான் மரண தேவதையின் கையில் சிக்காமற் தப்பி வாழ்பவர்? நீரிற் குமிழி போன்ற வாழ்க்கையை நினைந்து வருந்துவதால் என்ன பயன்? என்ற சான்றோர் மொழியை மனத்துட்கொண்டு எல்லோரும் ஆறுதலடைந்தனர்.

அவரது பூதவுடல் மறைந்ததேயன்றி அவர் நிறுவிய புகழுடம்பு என்றும் அழியா நிலையொடு விளங்குகிறது. சங்கீதம் உலகத்தில் இருக்கும் வரை ஸ்ரீ முத்தையருடைய பெயரும் புகழும் அதனோடு சேர்ந்து விளங்கும் என்பதில் எள்ளளவேனும் ஐயமில்லை.

---

## 30. முடிவுரை

ஸ்ரீ முத்தையர் சங்கீத அன்னையின் அருமந்தப் புதல்வராக விளங்கினர். பல புதிய வர்ணங்களும், கீர்த்தனைகளும், தில்லானாக்களும் எழுதிச் சங்கீத

தேவியை அழகு பெறச் செய்தார். மைசூர் சாமுண்டீச்வரியின் மீது நூற்றெட்டுக் கீர்த்தனை களும் சிவபிரான் மீது நூற்றெட்டுக் கீர்த்தனைகளும் இயற்றியுள்ளார். எல்லாம் சேர்த்து சுமார் ஐந்நூறு உருப்படிகளுக்கு அவர்கள் ஆசிரியராக விளங்கு கிறார்கள். அவ்வுருப்படிகள் ஸம்ஸ்கிருதம், தமிழ், தெலுங்கு, கன்னடம் ஆகிய நான்கு மொழிகளி லும் உள்ளன. புதமனோஹரி, பசுபதிப்ரியா, கோபிகா வஸந்தம், ஹம்ஸாநந்தி முதலிய அபூர்வ ராகங்களில் அவர் கீர்த்தனைகள் இயற்றி இருப் பதைச் சங்கீத சாஸ்திர விற்பன்னர்கள் மிகவும் பாராட்டுகின்றனர்.

இவ்வளவு பெருமை வாய்ந்த மகான்—இருப தாம் நூற்றாண்டிலே சங்கீத சாஸ்திரத்திற்கு அச் சாணிபோல் விளங்கிய கான கலாநிதி, இன்று வினிகை செய்பவர்களுக்குச் சிறந்த மார்க்கதர்சி, அன்று இணையற்றவராக விளங்கிய காயகசிகா மணி — என்றும் தமிழ் நாட்டுக்குப் பெருமை யளிக்கும் பெரியோர்களுள் ஒருவராக விளங்குவார். இத்தகைய பெரியோர்களை ஒரு நாடு பெறுவது மிகவும் அருமை. ஆதலின் அவர்களை என்றும் மறவாமல் போற்றுவது அந்நாட்டு மக்களுடைய கடமை.